# தமிழ் வருஷப்பிறப்பன்று வெளிவருகிறது

T.R. மஹாலிங்கம்
குமாரி ருக்மணி
T.R. ராமச்சந்திரன்
K. மஹாதேவன்·லேகமலா
கிருஷ்ணன் · மதுரம்







# ப்ரகதி ஸ்ரீ வள்ளி



**டைரக்ஷன்:- A.V. மெய்யப்பன் & A.T. கிருஷ்ணஸ்வாமி**

# இவ்வருஷத்திய மகோன்னத படம்!

மகத்தான **3**-வது வாரம்

**பெங்களூர்**-மூவிலண்ட் ★ **மைசூர்**-மோதிலால்

**12 - 4 - 45** முதல் **தவணகிரி** - மகாலக்ஷ்மீ

**ஆரம்ப தேதியை ஆவலுடன் எதிர்பாருங்கள்!**

**சென்னை**
**பிரபாத்**
•
**கோயமுத்தூர்**
**ராஜா**
•
**மதுரை**
**சென்ட்ரல்**




FOR ANDHRA, CEDED & NIZAMS : CHAMRIA TALKIE DISTRIBUTORS.

## இலங்கை சங்கீத ரஸிகர்களுக்கோர் அரிய இன்னிசை விருந்து!

★



கோட்டையம் P. கைலாசம்

★

கொழும்பு

## டவுன் ஹாலில்

22 - 4 - 1945

ஞாயிற்றுக்கிழமை

மாலை 5-மணிக்கு

கோட்டையம்
திரு. P. கைலாசம் ... பாட்டு

கும்பகோணம்
திரு. T. R. கிருஷ்ணன் ... வயலின்

காரைக்குடி
திரு. ரங்கு அய்யங்கார்-மிருதங்கம்




மலர் 4 }
இதழ் 35 }

1945 ஏப்ரல் 8

{ தாரண ௵
{ பங்குனி 26





நாளது 1945-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 6-ம் தேதி மத்தியானம் மணி பன்னிரண்டு டாண் டாண் டாண் என்று அடித்ததோ இல்லையோ, 'கெட் அவுட்!' என்று ஒரு குரல் கேட்கிறது. அறுபதாம் வயசு 'கெட் அவுட்' ஆகிறது. அறுபத்தோராம் வயசு வந்து சேருகிறது. நமது அன்பிற்குரிய ராவ் பகதூர் ஸ்ரீ கே. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்களுக்குத்தான் சொல்லுகிறோம்.

இந்த நாட்டில் பொது நன்மைக் காரியங்கள் செய்வதற்காக ஆரம்பிக்கும் பொது நல ஸ்தாபனங்களின் ஆரம்பம் முதற்கொண்டு ஒரே மனிதர் தலைவராக இருந்தாரென்றால், அதுவும் பத்து வருஷங்களுக்குமேல் இருந்தார் என்று சொன்னால் அது ஒரு பெரிய அற்புதம் என்றே சொல்ல வேண்டும். எத்தனையோ சண்டைகள், சச்சரவுகள், மனஸ்தாபங்கள், நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள், ராஜிநாமாக்கள் இவ்வளவுக்கும் பத்து வருஷத்திற்குள் வேண்டிய இடம் இருக்கத்தான் செய்கிறது. நமது ராவ் பகதூர் கே. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரோ அவ்வளவுக்கும் 'டிமிக்கி' கொடுத்து விட்டு, இரண்டு பொதுநல ஸ்தாபனங்களில் அவற்றின் ஆரம்பம் முதல் இன்று வரை தலைவராய் இருந்து வருகிறார். அவை சென்னைப் புத்தகாலயச் சங்கமும் சென்னை சங்கீத வித்வத் சபையும் ஆகும்.




குறித்த காரியத்தைக் குறித்த நேரத்தில் குறித்த பிரகாரம் செய்து முடிப்பதில் ஸ்ரீ கே. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு ஒரே வெறி. கொஞ்சங்கூட இழு பறியோ, 'இஞ்சா — இஞ்சா' சமாசாரமோ உதவாது. காலணாவுக்குக் கூடக் கணக்கு வைக்க வேண்டும். ரசீது காட்ட வேண்டும்.

இப்படிக்கெல்லாம் இருந்தும், சென்னைப் புத்தகாலய இயக்கத்துக்கு அவர் இடைவிடாத் தலைவராய் இருந்து வருவது பெரிய அதிசயம். அதைவிடப் பெரிய இமயமலை போன்ற அதிசயம், சங்கீத வித்வத் சபைக்குப் பத்து வருஷத்துக்கு மேல் அவரே தலைவராய் இருந்து வருவது! சங்கீதத்துக்கும் சண்டைக்கும் முதல் எழுத்து 'ச' அல்லவா?

ராவ்பகதூர் கே. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவர்களின் அறுபத்தோராவது பிறந்த தினத்தை முன்னிட்டுச் சென்னைப் புத்தகாலய சங்கத்தார் நாளது ஏப்ரல் 6-ம் தேதி கோகலே ஹாலில் பொதுக்கூட்டம் கூட்டி வாழ்த்துக் கூறுகிறார்கள். அந்த வாழ்த்துக்களுடன் நமது மனமார்ந்த வாழ்த்துக்களையும் சேர்த்து ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குச் சமர்ப்பிக்கிறோம்.




மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 35

# என்ன சேதி?

## பத்திரிகையாளர் மகாநாடு

கோயமுத்தூரில் ஏதோ ஒரு விசேஷம் இருக்கவேண்டும். அந்த விசேஷம் தான், காந்தம் இரும்பை இழுப்பது போலத் தமிழ்நாட்டுப் பத்திரிகையாளர்களையும் எழுத்தாளர்களையும் கவர்ந்து இழுக்கிறது. சில காலத்திற்கு முன் தமிழ் எழுத்தாளர் மகாநாடு கோயமுத்தூரிலே நடந்தது. சென்ற வாரத்தில் தமிழ்நாட்டுப் பத்திரிகையாளர் மகாநாடு கோயமுத்தூரில் நடைபெற்றது. தமிழ் நாட்டுப் பத்திரிகையாளர்களுக்கெல்லாம், 'மூத்த தலைவர்' என்று சொல்லக் கூடியவரான ஸ்ரீ கே. பி. விஸ்வநாத ஐயர் அவர்கள் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார். ஸ்ரீ கே. பி. விஸ்வநாத ஐயர், முப்பது வருஷமாகப் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டவர். தற்சமயம் இந்தியாவிலேயே சிறந்த தினசரி என்று கருதப்படும் 'ஹிந்து'ப் பத்திரிகையின் பிரதம உதவி ஆசிரியர். இந்தப் பரந்த பூவுலகத்தின் அரசியல் விவகாரங்கள், பொருளாதாரப் பிரச்னைகள் முதலியவற்றில் ஸ்ரீ கே. பி. விஸ்வநாத ஐயருக்குத் தெரியாதது ஏதேனும் இருந்தால் அது இன்னும் ஒரே ஒருவருக்குத்தான் தெரிந்திருக்க முடியும். அந்த ஒரே ஒருவர் ஸ்ரீமான் கடவுள்தான்.


கே. பி. விஸ்வநாத ஐயர்

## அவர்களுடைய நன்மைகள்

ஸ்ரீ கே. பி. விஸ்வநாத ஐயர் தலைமையில் கூடிய மகா நாட்டில் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டவர்களுடைய நலன்கள், உரிமைகள், சம்பளங்கள், படிகள் முதலிய விஷயங்களைப் பற்றி உசிதமான தீர்மானங்கள் நிறைவேறின. உலகத்தில் வேறு எந்த வகைத் தொழிலாளருடைய சுதந்திரம், சம்பளம், படி முதலிய பிரச்னையைக் காட்டிலும், பத்திரிகைத் தொழிலாளரின் மேற்படி பிரச்னைகள் மிகவும் முக்கியமானவை. ஏனெனில், பத்திரிகையாளர் பொதுஜன அபிப்பிராயத்தை உருப்படுத்துகிறவர்கள். பொதுஜனக் கல்வியை வளர்ப்பவர்கள். அவர்கள் மனக் குறையுடனும் அதிருப்தியுடனும் எரிச்சலுடனும் இருந்தால், அந்த அளவுக்கு அவை அவர்கள் எழுத்திலும் பிரதிபலிக்கும். அவர்கள் உருப்படுத்தும் பொதுஜன அபிப்பிராயமும் மனக் கசப்பை ஆதாரமாகக் கொண்டதாகிவிடும். ஆகவே, பத்திரிகையாளரின் சம்பளம் முதலிய பிரச்னைகள் மிகவும் முக்கியமானவை.

## அவர்களுக்கு ஒரு 'கிளப்'

ஆனால், பத்திரிகையாளரின் சம்பளம், படி விஷயத்தைக் காட்டிலும் மிக முக்கியமானது அவர்களுக்குள் ஒற்றுமை நிலவுதலாகும். ஒற்றுமை என்றால் அபிப்பிராய ஒற்றுமையை நாம் கூறவில்லை. பொதுப் பிரச்னைகளில் பத்திரிகையாளர்களுக்குள் அபிப்பிராயபேதம் இருப்பது இயற்கை. அதை வற்புறுத்தி வெளியிடுவது அவர்களுடைய தர்மம். ஆனால் பத்திரிகையாளர்கள் சொந்த முறையில் ஒற்

றுமையையும் நேசத்தையும் வளர்த்துக் கொண்டால் தேசத்துக்கு அதனால் ஏற்படக்கூடிய நன்மையை அளவிட முடியாது. அபிப்பிராய பேதத்துக்கு இடமில்லாமல் தேச நன்மையை முன்னிட்டு ஒற்றுமையாகச் செய்யக்கூடிய காரியங்கள் எத்தனையோ இருக்கத்தான் செய்கின்றன. பத்திரிகையாளர்களுக்குள் சொந்த முறையில் ஒற்றுமையும் நேச பாவமும் இருக்குமானால் அம்மாதிரி தேசநன்மைக்கான காரியங்களை அபரிமிதமான வெற்றியுடன் செய்து முடிக்கலாம்.

ஆகையினால்தான் கோயமுத்தூர் சம்மேளனத்தில், சென்னையில் ஒரு 'பத்திரிகையாளர் கிளப்' ஏற்படுத்த வேண்டும் என்பதாக நிறைவேறிய தீர்மானத்தை நாம் மிக முக்கியமானதாகக் கருதி மனப்பூர்வமாக ஆதரிக்கிறோம். இந்த யோசனை காரியத்தில் நடைபெறுமானால், அது, பத்திரிகையாளர்களுக்குள் பரஸ்பரம் நேசபாவத்தை வளர்க்கப் பெரிதும் உதவியாயிருக்கும். அதன் மூலம் எத்தனையோ தேச நன்மைக்கு உகந்த அரும் பெரும் காரியங்களை எளிதில் செய்து முடிக்கலாம்.

## சத்தியமூர்த்தி வாரம்

சென்னையில், காலஞ்சென்ற தேச பக்தர் ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்கள் வாரம் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. ஒவ்வொரு நாளும் பொதுக் கூட்டம் நடந்தது. பலர் ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்களைப் பற்றித் தங்களுடைய 'டிரிபியூட்'களை 'பே' பண்ணினார்கள். (அதாவது, புகழுரைகளை வழங்கினார்கள்.) இதோடு காரியம் நின்று விட்டதா, அல்லது ஸ்ரீ சத்தியமூர்த்தி ஞாபகார்த்த நிதிக்குப் பணமும் ஏதாவது கொடுக்கப்பட்டதா என்பது இனிமேல்தான் தெரியவேண்டும்.

## குறை யார் மீது?

பொதுவாக மேற்படி கூட்டங்களில் ஞாபகார்த்த நிதி வசூல் திருப்திகரமாக நடக்காதது பற்றிப் பலர் குறை தெரிவித்தார்கள். கோகலே ஹால் கூட்டத்தில் ஒருபிரசங்கி, "இது என்ன அவமானம்! ஸ்ரீ சத்தியமூர்த்தி நிதிக்கு ஏன் பணம் வசூலாக வில்லை? குற்றம் அவருடையதல்ல. நம்மிடந்தான் ஏதோ குறை இருக்கிறது" என்று கூறினார். இதைப் பற்றி யாதொரு சந்தேகமும் இல்லை. குறை நம்மிடந்தான் இருக்கிறது. நாம் ஒருவரை யொருவர் அநியாயமாகவும் அகௌரவமாகவும் தாக்கிக்கொண்டு பொதுஜனங்களுக்கு நம்மிடமும் மதிப்பில்லாமல் செய்துவிடுகிறோம். அவ்வாறு பொதுஜனங்களுக்கு நம்மிடம் ஏற்படும் அவமதிப்பும் நம்பிக்கைக் குறைவும் காலஞ்சென்ற தேச பக்தர்களையும் ஓரளவு பீடிக்கிறது.

## ஓர் உதாரணம்

தமிழ்நாட்டு தேசத் தொண்டர்கள் எப்படித் தங்களைத் தாங்களே குறைத்துக் கொள்கிறார்கள் என்பதற்கு ஓர் உதாரணம் பார்ப்போம். தேசத்தில் தற்சமயம் காங்கிரஸ்காரர்கள் மாகாண சர்க்காரைக் கைப்பற்றுவதைப் பற்றி விவாதம் நடந்து வருகிறது. எல்லைப்புற மாகாணத்தில் காங்கிரஸ் மந்திரிசபை ஏற்பட்டதிலிருந்துதான் இது ஆரம்பமாயிற்று. அங்கு காங்கிரஸ் மந்திரிசபை ஏற்பட்டதிலிருந்து "பொது ஜனங்களிடையே புத்துயிரும் புது மகிழ்ச்சியும் காணப்படுகின்றன" வென்று எல்லைப்புற காந்தி அத்தாட்சி கூறுகிறார். பல தேசபக்தர்கள் மற்ற மாகாணங்களிலும் காங்கிரஸ் மந்திரி சபை அமைக்க வேண்டும் என்கிறார்கள். வேறு பல தேசபக்தர்கள் அவசரப்படக் கூடாது என்கிறார்கள். அபிப்பிராய பேதம் ஏற்படக் கூடிய விஷயந்தான். விவாதத்துக்கு இடமான பிரச்னைதான். ஆனாலும், விவாதத்தை நேர் முறையில் விரசமில்லாமல், ஒருவரை யொருவர் அகௌரவமாகத் தாக்காமல் நடத்தலாம் அல்லவா? தமிழ் நாட்டுத் தேசத் தொண்டர்கள் அப்படிச் செய்கிறார்களா என்பது கேள்வி.

## ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை

சென்ற இருபத்தைந்து வருஷ காலமாக விடுதலைப் போரில் இடைவிடாமல் முன்னணியில் நின்று வந்திருக்கும் தமிழ் நாட்டுத் தொண்டர் ஒருவர் உண்டு என்றால், அவர் ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளைதான். 1921-ம் ஆண்டில் மகாத்மாவின் முதலாவது பொதுஜன இயக்கமானது திரண்டு எழுந்தபோது, சிறைக்குச் செல்லுவதற்குத் தமிழ் நாட்டில் முதல் முதலில் முற்பட்டவர் ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை. அன்று முதல் இன்று வரை ஆறு தடவை அவர் சிறைவாசம் செய்திருக்கிறார். ஆகஸ்ட் தீர்மானத்தை எதிர்த்த 'குற்ற'த்தையும் ராஜாஜியை ஆதரித்த 'பிசகை'யும் அவர் செய்யவில்லை. அவர் அரியலூர் மகாநாட்டுக்குப் பிறகுதான் சிறையிலிருந்து வெளிவந்தார். அப்படிப் பட்டவரைச் சுயநலக்காரர் என்ற பட்டம் சூட்டிக்

காங்கிரஸ் கமிட்டிகளைக் 'கற்பழித்தல்' முதலிய குற்றங்களையும் அவர் தலை மேல் சுமத்துவதென்றால், அதைப் போலத் தேசத்துக்கும் தேசத் தொண்டுக்கும் பொது வாழ்வுக்கும் கேடு விளைவிக்கக் கூடிய காரியம் வேறு ஒன்று இருப்பதாக நமக்குத் தோன்றவில்லை. இப்பேர்ப்பட்ட கேடான காரியத்தைச் செய்கிறவர் யார்? அவரும் ஒரு தேசபக்தத் தொண்டர்தான். நமது மாஜி பார்லிமெண்டரி காரியதரிசி ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் பி. ஏ., பி. எல். அவர்கள்தான்.

## விவாதம் என்ன?

ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை முதன் முதலில் ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றபோது, ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் ஒத்துழையாமை இயக்கத்துக்கு விரோதமாகக் கலாசாலையில் படித்துக் கொண்டிருந்தார். பின்னர், வெகு காலத்துக்கு அப்பால் காந்தி – இர்வின் உடன்படிக்கையினால் காங்கிரஸ் மகத்தான செல்வாக்கடைந்த பிறகுதான் அவர் தேசியப் போராட்டத்தில் கலந்து கொண்டார். ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை தேசத்திற்குச் செய்திருக்கும் தொண்டிலோ தியாகத்திலோ நூற்றில் ஒரு பங்குகூட ஸ்ரீ பக்தவத்ஸலம் செய்யவில்லை. இரண்டு வருஷம் பார்லிமெண்டரி காரியதரிசி வேலை பார்த்துத் தமது அரசியல் தொண்டிற்குப் பிரதிப் பிரயோஜனம் அடைந்திருக்கிறார். ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளையோ எந்த விதலாபத்தையும் அடையவில்லை. அப்படியிருக்க, ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளையைக் குறித்து ஸ்ரீ பக்தவத்ஸலம் ஏன் இவ்வளவு தகாத மொழிகளைச் சொல்ல வேண்டும்? அப்படிக் காரமாய்ப் பேசுவதற்கு இரு கட்சிக்கும் உள்ள வித்தியாசந்தான் என்ன? ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை "மாகாண சர்க்காரைப் பிடித்துக் கொண்டால் சிறையிலுள்ள அரசியல் கைதிகளை விடுதலை செய்யலாம்" என்கிறார். ஸ்ரீ ஸி. என். முத்துரங்க முதலியார் "முதலில் அரசியல் கைதிகள் விடுதலையானால், அப்புறம் மந்திரி பதவி ஏற்கலாம்" என்கிறார். இந்தச் சிறு வித்தியாசத்திற்காக இப்படிக் கேவல தோஷாரோபணம் செய்ய வேண்டுமா? தமிழர் பண்பாட்டிற்கே தகுதி யில்லாத ஆபாச வார்த்தைகளை உபயோகித்துத் தாக்க வேண்டுமா?

இப்படியெல்லாம் தாக்குவதின் பலன் என்னவென்பதை மறுபடியும் ஒரு தடவை ஞாபக மூட்டுகிறோம். பொதுவாக எல்லாத் தேசத் தொண்டர்களிடமும் பொது ஜனங்கள் நம்பிக்கை இழந்து அவமதிப்புக் கொள்வார்கள். ஒரு காலத்தில், தேசபக்தர்கள் என்றால் தமிழ் நாட்டு மக்களுக்குப் பெரிதும் மரியாதை இருந்தது. இப்போது, அது ஓரளவு குறைந்திருக்கிறது. சாதாரண அபிப்பிராய பேதத்துக்காகத் தேசத் தொண்டர்கள் ஒருவரை யொருவர் விகாரமான மொழிகளில் தாக்கிக் கொள்ளுவதென்று ஏற்பட்டால் பொது ஜனங்களுக்கு அவர்களிடம் இப்போது இருக்கும் மதிப்பும் குறைந்துபோகும். இவர்களுடைய காரியமானது இப்போது உயிரோடு உள்ளவர்களை மட்டுமல்லாமல் காலஞ்சென்ற தலைவர்களையும் பாதிக்கும் என்று அஞ்சுகிறோம்.

---

# பாலக்காட்டில் சங்கீத விழா

*சென்ற மார்ச் மாதம் 12, 13, 14-ம் தேதிகளில் பாலக்காட்டு நூரணி 'சரஸ்வதி கான சபா'வின் வருஷாந்திர சங்கீத உற்சவம் வெகு விமரிசையாக நடைபெற்றது.*

*மூன்று தினங்களிலும் முறையே ஸ்ரீ டி. கே. ராதாகிருஷ்ணன் அவர்களின் வேணு கானம், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் கச்சேரி, ஸ்ரீ செம்மை வைத்தியநாத பாகவதர் அவர்களின் கச்சேரி — இவை அமோகமாக நடந்தன.*



*இரண்டாம் நாள் நடந்த ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி கச்சேரியில் ஸ்ரீ சரஸ்வதி கான சபையைச் சேர்ந்த சங்கீத ரசிகர்கள் அழகான வேலைப் பாட்டுடன் செய்யப்பட்டிருந்த வெள்ளி வீணையைப் பரிசளித்தார்கள். கான கந்தர்வ சங்கீத சம்ராட் ஸ்ரீ வைத்தியநாத பாகவதரும் சங்கீத ரத்ன சௌடய்யா அவர்களும் தங்களுக்கு ஒரு பக்கமாக மேற்படி வெள்ளி வீணையைப் பிடித்து ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியிடம் கொடுத்தபோது, சபையில் ஏற்பட்ட சந்தோஷ ஆரவாரத்தைச் சொல்லி முடியாது.*

*[சென்னை உம்மிடி கம்பெனியாரால் வெகு திறமையான வேலைப் பாட்டுடன் செய்யப்பட்ட மேற்படி வெள்ளி வீணைதான் மேலேயுள்ள படத்தில் காண்பது.]*

# ஜனாப் சந்தேக மயம்


ஜனாப் ஜின்னா ஆஸாத்தைக் கண்டு
சந்தேகப்பட்டார்!


ராஜாஜியிடம் சந்தேகப்பட்டார்.


மகாத்மா காந்தியைக் கண்டும்
சந்தேகம் கொண்டார்.


ஸர்சாப்ருவிடம் ரொம்ப ரொம்ப
சந்தேகப்படுகிறார்.


பக்கத்தில் வராதே! பயமாய் இருக்கிறது!
கடைசியில், ஜனாப் ஜின்னா தம் நிழலைக் கண்டே சந்தேகப் படுவதில் வந்து முடியுமோ, என்னமோ?

-உம்மன்


இந்தியாவில் துணிப் பஞ்சம் ஏற்பட்டிருந்தும், இன்னும் பெருவாரியாகத் துணி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் படுவதாகத் தெரிகிறது.
துணியா வேண்டும்? இதோ தருகிறேன்.
அதிகார வர்க்கம்
இந்தியா
வெளிநாடு


ரூஸ்வெல்ட், சர்ச்சில், ஸ்டாலின் மூவரும் ஒருவரை யொருவர் விழுங்கி ஏப்பம் விடப் பார்க்கிறார்கள்!


பாவம்! ஜெர்மனியில் ஹிட்லர் ஆட்சி இடிந்து தகர்ந்து கொண்டிருக்கிறது.

# தேசீய வாரம்

பாரத நாடு பழம்பெரும் நாடு. இந்தப் பரந்த உலகத்தில் முதன் முதலில் மனித குலத்தின் நாகரிகம் பிறந்தது இந்த நாட்டிலேதான்.

கடவுள் ஞானம் என்பது முதன் முதலில் இந்தப் புண்ணிய பூமியிலே தான் உதயமாயிற்று.

மற்ற நாடுகளில் மக்கள் வன விலங்குகளைப்போல் வசித்து வந்த காலத்தில் இந் நாட்டில் மக்கள் அறிவிலும் கலை ஞானத்திலும் கடவுள் ஞானத்திலும் சிறந்து விளங்கினார்கள்.

ஐயாயிரம் வருஷத்துக்கு மேலாக ஒரு சாதி, ஒரு இனம், ஒரு நாகரிகம் என்பது, வாழையடி வாழையாகவும் இடையில் அறுபட்டோ அறுந்தோ போகாமலும் தொடர்ந்து வளர்ந்து வந்திருப்பது இந்த ஒரு தேசத்திலேதான்.

பதினாயிரம் வருஷங்களுக்கு முந்தி வேத முனிவர்கள் பாடிய வேத மந்திரங்களை இன்றும் இந்நாட்டில் அதே ஸ்வரத்தில், அதே ஸ்தாயியில், அதே உச்சரிப்புடன் ஓதி வருகிறார்கள்.

ஐயாயிரம் வருஷத்துக்கு முன்னால் ஜனங்களின் நாவில் நடமாடிய பாஷையை—சொற்களை—சொற்றொடர்களை—இன்றளவும் அதே மாதிரி பேசும் ஜனங்கள் இந்நாட்டில் இருக்கிறார்கள்.

நாற்பது கோடி மக்கள் — பாரதத் தாயின் புதல்வர் புதல்விகள் — இந் நாட்டில் வாழ்கிறோம்.

இவ்வளவு ஜனத் தொகை கொண்ட தேசம் — ஒரு வேளை சீன நாட்டைத் தவிர — இவ் வுலகில் வேறெதுவும் கிடையாது.

இத்தகைய பழம் பெரும் நாடு. புராதன நாகரிகத்தில் சிறந்த நாடு. அறிவாளிகளையும் ஞானிகளையும் தர்மாத்மாக்களையும் வீரர்களையும் தோற்றுவித்த நாடு. — இன்றைய தினம் அன்னிய ஆட்சியின் கீழ் அடிமைப் பட்டுக் கிடக்கிறது.

நாலரைக் கோடி ஜனத்தொகையே கொண்ட சின்னஞ்சிறு தீவில் தோன்றி உலகத்தை யெல்லாம் கட்டி ஆளுகிற ஆங்கிலோ-ஸாக்ஸன் ஜாதியார் இந்தியாவில் நூற்றைம்பது வருஷமாக ஆதிக்கியம் செலுத்தி ஆட்சி புரிகிறார்கள்.

இந்த அவமானத்தை உள்ளபடி நினைத்துப் பார்த்தால், உணர்ச்சியுள்ள இந்தியன் எவனும் "நெஞ்சு பொறுக்குதில்லையே!" என்று கதறாமல் இருக்க முடியாது. கோபத்தினால் கொதிக்காமல் இருக்க முடியாது. ஆத்திரத்தினால் அலறாமல் இருக்க முடியாது.

* * *

அறுபது வருஷத்துக்கு முன்னாலேயே இந் நாட்டில் வாழ்ந்த பெரியோர்கள் சிலர், மேற்படி அவமானத்தை உணர்ந்தார்கள். உணர்ந்து, அதைத் துடைப்பதற்கு வழி என்ன என்று தேடினார்கள். வருங்காலத்தில் இந்தியா சுதந்திரம் அடையப் போகும் திருநாளைக் குறித்துக் கனவு கண்டார்கள். அந்தக் கனவை உண்மையாக்கும் முயற்சியில் ஈடுபட்டு அதற்காக எத்தனையோ தியாகங்களைச் செய்தார்கள். எத்தனையோ கஷ்டங்களை அநுபவித்தார்கள்.

தாதாபாய் நௌரோஜி, சுரேந்திரநாத் பானர்ஜி, கோபால கிருஷ்ண கோகலே, லாலா லஜபதிராய், பாலகங்காதர திலகர், ஜி. சுப்பிரமணிய அய்யர் முதலான அந்த மகா புருஷர்களை நாம் என்றென்றைக்கும் மறக்க முடியாது; மறக்கக் கூடாது.

பிறகு, இன்றைக்கு இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால், தேச சுதந்திரப் போராட்டத்தில் ஒரு புதிய அத்தியாயம் ஆரம்பமாயிற்று. அஹிம்சை, சத்தியம் என்னும் இரு பெரும் ஆயுதங்களுடனே மகாத்மா காந்தி தேச சுதந்திரப் போராட்டத்துக்குத் தலைமை வகிக்க முன்வந்தார்.

மகாத்மாவின் வரவினால் தேசத்தில் ஒரு பெரிய ஜீவசக்தி தோன்றியது. நாட்டு மக்கள் லட்சக்கணக்கிலும் கோடிக்கணக்கிலும் சுதந்திரப் போரில் ஈடுபடுவதென்று ஏற்பட்டது. சுதந்திரத்துக்காகப் பொதுஜன இயக்கமென்பது அப்போதுதான் முதன் முதலில் ஆரம்பமாயிற்று.

தேச மக்களின் சுதந்திர தாக உணர்ச்சியை அடக்கி ஒடுக்குவதற்காக அதிகார வர்க்கத்தார் ரௌலட் சட்டம் என்று பெயர்பெற்ற அடக்குமுறைச் சட்டத்தை ஏற்படுத்தினார்கள். அந்தச்

சட்டத்தை எதிர்க்கும் முறையில் பொது ஜன சுதந்திர இயக்கத்துக்கு மகாத்மா அங்குரார்ப்பணம் செய்தார்.

1919-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 6-ம் தேதியன்றுதான் முதன் முதலாக இந்திய சுதந்திர இயக்கம் தேசியப் பொதுஜன இயக்கமாகப் பரிணமித்தது.

அன்றைய தினம் இமயமலையிலிருந்து கன்னியாகுமரி வரையில் நாடு நகரங்களிலெல்லாம் ஹர்த்தால் நடைபெற்றது. வியாபாரிகள் கடைகளை மூடினார்கள். தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தார்கள். தேசத்தில் சகல ஜனங்களும் அவரவர்களுடைய வேலையை நிறுத்தினார்கள். லட்சக் கணக்கானவர்கள் உபவாசம் இருந்தார்கள். அன்று மாலை தேசமெங்கும் கணக்கற்ற பொதுக் கூட்டங்களும் நடைபெற்றன.

இவ்விதம் நாட்டில் முதன் முதலில் புதிதாக எழுந்த ஜனசக்தியானது, தேசமெங்கும் ஒரே கிளர்ச்சியையும் கோலாகலத்தையும் உண்டாக்கியது. அடுத்த ஏழு தினங்கள் தேசமே அல்லோலகல்லோலப்பட்டது.

ஏப்ரல் 13-ம் தேதியன்று இந்தியா தேசம் என்றும் மறக்கமுடியாத சம்பவம், வடக்கே அமிருதசரஸ் நகரில் ஜாலியன்வாலா பாக் தோட்டத்தில் நடந்தது. அங்கே பதினாயிரக் கணக்காக ஜனங்கள் கூடியிருந்த பொதுக் கூட்டத்தைத் தளபதி டயர் என்னும் மனித உருக் கொண்ட அரக்கன் படையுடன் வந்து வளைத்துக்கொண்டு ஜனங்கள் தப்பவும் வழியில்லாதபடி துப்பாக்கிப் பிரயோகம் செய்தான். (பின்னால் நடந்த விசாரணையில் அந்தப் பாதகன் ''சுட்டேன், சுட்டேன்! துப்பாக்கியில் தோட்டா தீரும் வரையில் சுட்டேன்!'' என்று மார் தட்டிக் கொண்டு கூறினான்.)

அன்று அந்தப் புனித ஸ்தலத்தில் இந்தியத் தாயின் புதல்வர்கள் அறுநூறு பேர் இந்தியாவின் சுதந்திரத்துக்காகத் தங்கள் உயிரைப் பலி கொடுத்தார்கள்.

தேசத்தில் நவசக்தி உதயமான அந்த 1919-ம் ஆண்டிலிருந்து பிரதி வருஷம் ஏப்ரல் 6-ம் தேதியிலிருந்து 13-ம் தேதி வரை தேசிய வாரம் என்று கொண்டாடப்பட்டு வருகிறது. இந்த வருஷமும் கொண்டாடப்படுகிறது.

சென்ற இருபத்தைந்து ஆண்டு காலத்தில் தேசத்தில் எத்தனையோ காரியங்கள் நடந்து விட்டன. சுதந்திரப் போராட்டத்தில் சில சமயம் வெற்றிச் சிகரத்துக்கு மிகவும் அருகாமையில் தேசம் வந்ததுண்டு. வேறு சில சமயம் தோல்வியின் அதல பாதாளத்துக்குப் போனதும் உண்டு. ஜனங்கள் அபரிமிதமான குதூகலத்துடன் இருந்த நாட்களையும் கண்டிருக்கிறோம். அடியோடு உற்சாகம் இழந்து சோர்விலே மூழ்கியிருந்த தினங்களையும் பார்த்திருக்கிறோம். நமது தேசத் தலைவர்கள் கிட்டத் தட்டப் பூரண அதிகாரத்துடன் ஆட்சி நடத்திய காலத்தையும் பார்த்திருக்கிறோம். கலப்பற்ற அதிகார வர்க்கத்தின் ஆட்சி எதேச்சையாய்த் தாண்டவமாடும் காலத்தையும் கண்டு வருகிறோம்.

மகாத்மாவின் தலைமையில் நடந்திருக்கும் சென்ற இருபத்தைந்து வருஷ சுதந்திரப் போரில், நாம் இன்னமும் வெற்றி காணாதது மிகவும் வருந்தத்தக்க காரியந்தான்.

மகாத்மா சொல்லியிருப்பதுபோல், அதற்குக் காரணம் பெரிதும் நம்முடைய தவறுகளேயாகும். ''நம்முடைய தவறுகள்'' என்னும்போது, பொது ஜனங்களின் தவறுகளையும் குறிப்பிடுகிறோம்; நம் தலைவர்களின் தவறுகளையுந்தான் குறிப்பிடுகிறோம். இவற்றோடு, நம் கைக்கு அடங்காத உலகத்துக்கே பொதுவான காரணங்களும் இருக்கின்றன.

எது எப்படியானாலும், யாருடைய தவறுகளினால் அல்லது எந்தக் காரணத்தினால் நாம் இன்னும் பூரண வெற்றி காணவில்லையென்றாலும், சென்ற இருபத்தைந்து வருஷத்து இந்திய சுதந்திரப் போராட்டம் ஒரு நாளும் வீண் போனதாகாது. நாளுக்கு நாள் வருஷத்துக்கு வருஷம் மக்களின் சுதந்திர தாகம் மட்டும் வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது. இந்தச் சுதந்திர தாகம் தணியாதிருக்கும் வரையில் தேசத்துக்கு விடுதலை உண்டு என்ற நிச்சயமும் உண்டு. அந்தச் சுதந்திர தாகம் தணியாமல் பார்த்துக் கொள்வதும் அதை வளர்ப்பதும் மிக முக்கியமான காரியங்கள். வருஷா வருஷம் ஏப்ரல் 6-ம் தேதி முதல் 13-ம் தேதி வரை தேசிய வாரமாகக் கொண்டாடுவது மேற்படி நோக்கத்துக்கு மிகவும் அநுகூலமானது; அவசியம் செய்ய வேண்டிய காரியம்.

தேசிய வாரத்தை எப்படிக் கொண்டாட வேண்டும்? தேசிய வாரத்தில் என்னென்ன செய்ய வேண்டும்?

முதலில், இந்தப் புண்ணிய பாரத பூமி இன்று சுதந்திரம் இழந்து அந்நிய ஆட்சியில் உழல்வதை நினைவு கூர வேண்டும். நினைவு கூர்ந்து, இந்த நிலைமையை முடிவு செய்ய உறுதி கொள்ள வேண்டும்.

1919-ம் வருஷம் ஏப்ரல் 6-ம் தேதி தேசத்தில் மூண்டெழுந்த புதிய ஜன சக்தியை நினைவு கூர வேண்டும். ஏப்ரல் 13-ம் தேதி ஜாலியன் வாலா பாக்கில் உயிர்ப் பலியானவர்களையும் எண்ண வேண்டும்.

அன்று முதல் இன்று வரை தேசத்துக்காக எத்தனையோ தியாகங்கள் செய்தவர்களையும் சொல்லொணாத கஷ்டங்களை அநுபவித்தவர்களையும் உயிரிழந்தவர்களையும் நினைத்துப் போற்ற வேண்டும்.

மேற்கூறியதைத் தவிர உருவாகச் செய்ய வேண்டிய நிர்மாண வேலைகளும் இருக்கின்றன. அவ் வேலைகள் என்ன வென்பதை மகாத்மா காந்தி சமீபத்தில் வெளியிட்டிருக்கிறார். பதினைந்து வகை நிர்மாண வேலைகளை வகுத்துச் சொல்லியிருக்கிறார். முக்கியமாக இந்த தேசீய வாரத்தில் மேற்படி நிர்மாண வேலைகளில் ஈடுபடவேண்டுமென்றும் தேச மக்களைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

* * *

மகாத்மா காந்தி கடைசியாக வகுத்துக் கூறியிருக்கிறபடி, நிர்மாண திட்டம் பதினைந்து அம்சங்கள் அடங்கியதாகும். அவை வருமாறு :—

1. சமூக ஒற்றுமை. 2. தீண்டாமை விலக்கு. 3. மதுவிலக்கு. 4. கதர். 5. மற்ற கிராமக் கைத்தொழில்கள். 6. அடிப்படைக் கல்வி. 7. கிராம முன்னேற்றம். 8. முதியோர் கல்வி. 9. பெண்குலத்துக்குத் தொண்டு. 10. சுகாதாரம். 11. தேசீய பாஷை-இந்தி. 12. தாய்மொழி வளர்த்தல். 13. பொருளாதார சமத்துவம். 14. குடியானவர்-தொழிலாளர் - மாணாக்கர் அமைப்பு. 15. காட்டு சாதியாரின் தொண்டு.

மேலே கூறிய பதினைந்து வகைத் தொண்டுகளில் அவரவர்களுக்கு உகந்த தொண்டில் ஈடுபடலாம்.

ஆனால் எல்லாரும் ஈடுபடக்கூடிய தொண்டு, மகாத்மா காந்திக்கு எல்லாவற்றிலும் அதிகமாக உகந்த தொண்டு, நிர்மாண திட்டத்தின் நடு நாயகமாகவும் சின்னமாகவும் விளங்கும் தொண்டு கதர்த் தொண்டுதான்.

நிர்மாண திட்டத்திற்குள் ஜீவாதார திட்டமான கதர்த் திட்டத்திற்கு மகாத்மா காந்தி ஒரு புதிய உருவைக் கொடுத்திருக்கிறார்.

அது நாளது ஜூலை மாதத்திலிருந்து அமுலுக்கு வரப்போகிறது.

இதுவரையில் கதர் அணிய விரும்புகிறவர்கள் எல்லாரும் கதர்க் கடைக்குப் போய் ரூபாயைக் கொடுத்துக் கதர் வாங்கிக் கொள்ளலாம் என்றிருந்தது.

அதாவது கதர் அணிவதற்கு இரண்டே இரண்டு நிபந்தனைகள்தான் இருந்தன. 1. கையிலே பணம் இருக்க வேண்டும்; 2. கடையிலே கதர் இருக்க வேண்டும்.—அவ்வளவுதான்.

இனிமேல் அது முடியாது. அதாவது பணத்தை மட்டும் கொடுத்துக் கடையில் கதர் வாங்க முடியாது.

ஜூலை மாதம் முதல், பணத்துடன் கையால் நூற்ற நூலும் கொஞ்சம் கொடுத்தால்தான் கடையில் கதர் கொடுப்பார்கள்.

ஒரு ரூபாய் பெறுமான கதர் வாங்க வேண்டுமானால் அரையணாக் கை ராட்டை நூலும் சேர்த்துக் கொடுக்க வேண்டும்.

அரையணா நூல் கொடுப்பதும் வாங்குவதும் சிரமம் ஆனபடியால் குறைந்த பட்சம் ஒரு சிட்டம் நூல் (இரண்டே காலணா பெறுமானமுள்ளது) கொடுக்க வேண்டுமென்று வைத்திருக்கிறார்கள்.

ஜூலை மாதத்திலிருந்து ஒருவர் நாலரை ரூபாயும் ஒரு சிட்டம் நூலும் கொண்டு போய்க் கதர்க் கடையில் கொடுத்தால், ரூ. 4—10—3 பெறுமான கதர்த் துணி கொடுப்பார்கள்.

* * *

மகாத்மா காந்தி மேற்படி புதிய ஏற்பாட்டை எதற்காகச் செய்திருக்கிறார் :—

கதர்த் திட்டத்தின் அடிப்படையான நோக்கத்தை மக்களுக்கு நினைவூட்டுவதற்காகத்தான்.

அந்த நோக்கம் என்ன ?

இந்திய மக்கள் எல்லாரும் அவரவர்களுக்கு வேண்டிய ஆடைகளைக் கூடிய வரையில் அவர்களே தயாரித்துக் கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு குடும்பத்திலும் அந்தக் குடும்பத்துக்கு வேண்டிய துணிகளுக்கு நூல் நூற்றுக் கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு ஜில்லாவிலும், ஒவ்வொரு மாகாணத்திலும் அந்தந்தக் கிராமம், ஜில்லா,

மாகாணத்துக்குத் தேவையான நூலும் துணியும் உற்பத்தியாகிவிட வேண்டும்.

இந்த நோக்கம் பரிபூரணமாக நிறைவேறினால், இந்தியாவை மற்ற நாட்டார் அடிமைப்படுத்திவைக்க விரும்புவதற்கு ஒரு முக்கியமான காரணம் போய் விடுகிறது.

இவ்வாறு, அரசியல் நிலைமையிலும் பொருளாதாரத் துறையிலும் பெரும் புரட்சிகள் உண்டாவதற்குக் கதர்த் திட்டம் காரணமாகும்.

கதர்த் திட்டத்தின் மேற்படி ஜீவாதார நோக்கத்தை ஜனங்கள் நன்கு உணர வேண்டும். அதை அடிக்கடி அவர்களுக்கு ஞாபகப்படுத்த வேண்டும் என்பதற்காகவே மகாத்மா கதர் வாங்குவதற்கு மேற்படி புதிய நிபந்தனையை விதித்திருக்கிறார்.

இந்திய நாட்டின் சுதந்திரத்துக்கே இராட்டை இன்று சின்னமாக விளங்குகிறது.

இந்தியாவின் தேசிய சுதந்திரக் கொடியில் இராட்டை இடம் பெற்று விளங்குகிறது.

மனித குலத்துக்கு மகாத்மா காந்தி உபதேசிக்கும் அஹிம்சா தர்ம மார்க்கத்தின் சிறப்பான அறிகுறியாகக் கைராட்டினம் விளங்குகிறது.

இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு, முழுக்க முழுக்க இயந்திர நாகரிகத்தை மேற்கொண்ட போதிலும், கை இராட்டையையும் அதன் உயரிய இலட்சியத்தையும் என்றென்றைக்கும் இந்திய மக்கள் மறக்க முடியாது.

அப்படிச் சிரஞ்சீவித் தன்மையை அடைந்துவிட்ட கை இராட்டையை இன்று நாம் போற்றுவோமாக.

மகாத்மா காந்தியின் மனதைக் குளிரச் செய்வோமாக.

ஒரு மாதத்துக்கு ஒரு சிட்டம் நூல் (853 கஜம்) நூற்பது பெரிய காரியமல்ல; சிரமமான காரியமல்ல. சாதாரணமாய்ச் சில மணி நேரத்தில் ஒரு சிட்டம் நூல் நூற்றுவிடலாம்.

ஒவ்வொருவரும் செய்யக் கூடிய காரியம். செய்ய வேண்டிய காரியம்.

கதர்க் கடையில் பன்னிரண்டரை ரூபாய் கொடுத்து ஒரு பெட்டி இராட்டை வாங்கிக் கொள்ளுங்கள்.

நூற்க ஆரம்பித்துப் பாருங்கள்.

தேசிய வாரத்திலேயே இந்த உத்தமப் பணியை ஆரம்பித்து விடுங்கள்.

இராட்டையின் இன்னிசையை ஒரு தடவை அநுபவிக்க ஆரம்பித்து விட்டவர்கள், அப்புறம் இராட்டையைக் கைவிடவே மாட்டார்கள்.

# சிவகாமியின் சபதம்

கல்கி



பத்தாம் அத்தியாயம்

## வாக்கு யுத்தம்

மந்திரி மண்டலத்தாரின் ஒருமுகமான அபிப்பிராயத்தை முதன் மந்திரி சாரங்கதேவ பட்டர் கூறி முடித்ததும், மகேந்திர சக்கரவர்த்தி, சபையோரை ஒரு தடவை சுற்றி வளைத்துப் பார்த்தார். மாமல்லனும் பரஞ்சோதியும் இருந்த இடத்தை மட்டும் நோக்காமல் அவருடைய கண்ணோட்டத்தை முடித்து விட்டு, "சபையோர்களே! உங்களுடைய அபிப்பிராயத்தை முன் கூட்டியே எதிர்பார்த்து ......" என்று ஆரம்பித்தார். ஆசனத்தில் நிலைத்து உட்காரவும் முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்த மாமல்லர் அப்போது துள்ளி எழுந்து, "பல்லவேந்திரா! சாதுக்களும் சமாதானப் பிரியர்களும் இராஜதந்திரிகளும் தீர்க்க தரிசிகளும் வீற்றிருக்கும் இந்த மகா சபையில் அடியேனும் ஒரு வார்த்தை சொல்லலாமா?" என்று கேட்டார். அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் சீறலுடன் நெருப்பைக் கக்கிக் கொண்டு வரும் அக்கினியாஸ்திரத்தைப் போல் அந்தச் சபையில் இருந்தவர்களின் செவியில் பாய்ந்தது.

மாமல்லருடைய அக்கினியாஸ்திரங்களை மகேந்திரர் வருணாஸ்திரத்தைப் பிரயோகித்து அடக்க முயன்றார்.

"மாமல்லா! இதென்ன இப்படிக் கேட்கிறாய்? பல்லவ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்துக்கு ஏக போக உரிமை பூண்ட குமார சக்கரவர்த்தி நீ! சாம்ராஜ்யத்தின் மந்திராலோசனைச் சபைகளில் கலந்து கொள்ள உனக்கு இல்லாத பாத்தியதை வேறு யாருக்கு உண்டு? திவ்யமாக உன் மனதில் தோன்றுகிறது என்னவோ, அதைச் சொல்! ஆனால் நான் உன்னுடைய தந்தையாகையாலும், இச்சபையில் உள்ளவர்களெல்லாம் வயதிலும் அனுபவத்திலும் முதிர்ந்த பெரியவர்களாதலாலும் எங்களையெல்லாம் அவமதித்துப் பேசும் உரிமை மட்டும் உனக்குக் கிடையாது! இல்லை, அவசியம் அந்த உரிமையும் உனக்கு வேண்டும் என்றால் ......"

அப்போது சபையில் ஏற்பட்ட குறுநகைப்பின் ஒலி மாமல்லர் காதில் விழவும் அவர் தம் கண்களில் தீ எழுமாறு ஒரு தடவை சபையைச் சுற்றிப் பார்த்து விட்டுத் தந்தையை இடைமறித்துக் கூறினார் :—

"தந்தையே! தங்களையாவது இங்குள்ள பெரியவர்களையாவது அவமதிக்கும் எண்ணம் எனக்குக் கொஞ்சங்கூட இல்லை. பல்லவ குலத்தையும் பல்லவ ராஜ்யத்தையும் உலகம்

என்றென்றைக்கும் அவமதிக்காமல் இருக்க வேண்டுமே என்றுதான் கவலைப்படுகிறேன். வாழையடி வாழையாகத் தொண்டைமான் இளந்திரையன் காலத்திலிருந்து வந்த வீர பல்லவ குலத்தின் பெருமையைக் குறித்துத் தாங்கள் அடிக்கடி சொல்லியிருக்கிறீர்கள். இந்த வீர பல்லவ குலத்தைச் சேர்ந்தவர்கள் யாராவது இதற்கு முன்னால் இவ்விதம் செய்ததுண்டா? போர்க்களத்தில் எதிரியின் படைகளுக்குப் புறங்காட்டிப் பின் வாங்கி வந்ததுண்டா? பகைவர்களின் படையெடுப்புக்குப் பயந்து, கோட்டைக்குள்ளே ஒளிந்து கொண்டதுண்டா? முதன் முதலில், வாதாபி சைன்யம் பல்லவ சாம்ராஜ்யத்துக்குள் புகுந்ததென்னும் செய்தி கேட்ட உடனே, நான் போர்க்களம் போவதற்கு அநுமதி கேட்டேன். தாங்கள் கொடுக்கவில்லை. வாதாபி சைன்யம் கோட்டைக்கருகில் வந்தபோது, மறுபடியும் தங்களை அநுமதி கேட்டேன். அப்போதும் தாங்கள் "பொறு! சமயம் வரும்!" என்றீர்கள். பல்லைக் கடித்துக் கொண்டு நான் பொறுத்திருந்தேன். அதனுடைய பயன் என்ன? பல்லவ நாட்டுக்குள் படையெடுத்து வரத் துணிந்த பாதகப் புலிகேசியுடன் இப்போது சமாதானம் செய்து கொள்ளப் போவதாகச் சொல்கிறீர்கள். தந்தையே! சேனாபதி! மந்திரிகளே! அமைச்சர்களே! கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். நாளைக்கு உலகமெல்லாம் என்ன சொல்லும்? 'வாதாபி சக்கரவர்த்தி படையெடுத்து வந்தபோது, பல்லவ சக்கரவர்த்தி பயந்து கோட்டைக்குள் புகுந்து கொண்டார்; கடைசியில், சரணாகதி அடைந்து சமாதானம் செய்து கொண்டார்' என்றுதான் உலகத்தார் சொல்வார்கள். புலிகேசி சமாதானத்தை வேண்டித் தூது அனுப்பினான் என்று ஒருவரும் சொல்லமாட்டார்கள். பாண்டியனும் சோழனும் சேரனும் களப்பாளனும் பல்லவர்களைப் பார்த்து நகையாடுவார்கள். புள்ளலூரில் புறங்காட்டி ஓடிய கங்க நாட்டான் மறுபடியும் துள்ளி எழுவான். உலகம் உள்ள வரைக்கும் பல்லவ குலத்துக்கு ஏற்பட்ட இந்தப் பழி மறையாமல் இருக்கும்......"

இப்படி மாமல்லர் கேட்போரின் மான உணர்ச்சியைத் தூண்டும் வீர வார்த்தைகளைப் பேசிக்கொண்டு வந்தபோது, சபையிலிருந்தவர்களில் சிலர் 'கலகல' வென்று பேசத் தொடங்கினார்கள். மாமல்லருடைய வார்த்தைகளில் உண்மை இருக்கிறது என்று ஆமோதித்து அவர்கள் ஒருவரோடொருவர் கலந்து பேசிக் கொண்டதாகக் காணப்பட்டது.

இதைத் தமது கழுகுக் கண்களின் ஓரப் பார்வையினால் தெரிந்து கொண்ட மகேந்திரர், மாமல்லருடைய பேச்சில் நடுவில் குறுக்கிட்டார்.

"குழந்தாய்! உலகமானது நீ நினைப்பதுபோல் அவ்வளவு பைத்தியக்கார உலகம் அல்ல. மனிதர்கள் எல்லாரும் அவ்வளவு மூட்டாள்களும் அல்ல. அப்படியே இருந்தபோதிலும், அதற்காக நானும் மூட்டாள்தனமான காரியத்தைச் செய்ய முடியாது. அவசியமில்லாதபோது யுத்தத்தை நடத்த முடியாது. லட்சக்கணக்கான வீரர்களின் உயிரை வீண் வீம்புக்காகப் பலிகொடுக்க முடியாது. நாட்டின் பிரஜைகளைச் சொல்ல முடியாத கஷ்டங்களுக்கு அநாவசியமாக உள்ளாக்க முடியாது. மாமல்லா! இந்தப் பல்லவ சிம்மாசனத்தில் நான் ஏறிய பொழுது, இந்த மணி மகுடம் என் தலையில் சூட்டப்பட்ட அன்று, இந்தச் செங்கோலை

முதன் முதலாக என் கரத்தில் ஏந்திய அன்று, 'இந்த நாட்டின மக்களின் உயிரையும் உடைமையையும் காப்பாற்றுவேன். அவர்களுக்குக் கஷ்டம் எதுவும் வராமல் தடுப்பேன்' என்று நாடறிய, நாட்டு மக்கள் அறிய, மந்திரிகள் அமைச்சர்கள் அறிய, உலகம் அறியச் சபதம் செய்தேன். வெறும் வீம்புக்காகவோ, உலகத்தில் மூடர்கள் ஏதாவது சொல்வார்களே என்பதற்காகவோ அந்தச் சபதத்தை நான் கைவிட முடியாது'' என்று கம்பீரமான குரலில் தலை நிமிர்ந்து கூறினார்.

ஆனால், மாமல்லருடைய அம்பறாத் தூணியில் இன்னும் பாணங்கள் மிச்ச மிருந்தன.

"அப்பா! இந்தப் பல்லவ நாட்டுப் பிரஜைகளைப் பற்றித் தான் தாங்கள் கவலைப்படுகிறீர்கள் என்றால், அந்தக் கவலை தங்களுக்கு வேண்டாம். தெய்வாதீனமான காரணத்தினால் ஏழு மாதத்துக்கு முன்னால் ஒரு சிறு குக்கிராமத்தில் நான் மூன்று நாள் வசிக்க நேர்ந்தது. அப்போது அந்தக் கிராமத்து ஜனங்கள் பேசிக் கொண்டதை இந்த இரு செவிகளாலும் கேட்டேன். சபையோர்களே! இந்தப் பல்லவ இராஜ்யத்தின் பிரஜைகள் எல்லாரும் சுத்த வீரர்கள், — மானத்துக்காக உயிரையும் உடைமைகளையும் திரணமாக மதிக்கிறவர்கள், — என்ற செய்தியை உங்களுக்கு மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறேன். புள்ளலூர்ச் சண்டையைப் பற்றியும் அதில் நாம் அடைந்த வெற்றியைக் குறித்தும் பல்லவ நாட்டு மக்கள் எப்பேர்ப்பட்ட குதூகலம் அடைந்தார்கள் தெரியுமா? நாம் நமது வீர சைன்யத்துடன் இந்தக் காஞ்சிக் கோட்டைக்குள் ஒளிந்து கொள்ளப் போகிறோம் என்ற வதந்தியை அவர்களால் நம்பவே முடியவில்லை. தந்தையே! என் காதில் கேட்ட வார்த்தையைச் சொல்கிறேன். மண்டபப்பட்டுக் கிராமத்து ஜனங்கள் என்ன பேசிக் கொண்டார்கள் தெரியுமா? 'மாமல்லனைப் போன்ற புத்திரனையும், பரஞ்சோதியைப் போன்ற தளபதியையும் படைத்த மகேந்திர சக்கரவர்த்தி புலிகேசிக்குப் பயந்து எதற்காகக் கோட்டைக்குள் ஒளிந்துகொள்ள வேண்டும்? ஒருநாளும் அப்படி நடவாது!' என்று பேசிக் கொண்டார்கள். பல்லவேந்திரா! நமது பிரஜைகள் ஒருவேளை வீர தீரத்தில் குறைந்தவர்களாயிருந்து விடுவார்களோ என்று தாங்கள் ஒவ்வொரு ஊர்க் கோயிலிலும் பாரத மண்டபம் கட்டச் சொன்னீர்கள். பாரதம் வாசிக்கவும் ஏற்பாடு செய்தீர்கள். ஆனால் நமது குடிகள் — வீரத் தமிழ் மக்களின் சந்ததிகள் — சிறிதும் வீரத்தில் குறைந்தவர்களாயில்லை. யுத்தத்தினால் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களுக்கு அவர்கள் சிறிதும் அஞ்சவில்லை. ஆனால், நாம்தான் அவர்களுடைய நம்பிக்கையைப் பொய்ப் படுத்தி விட்டோம். புலிகேசி காஞ்சிக் கோட்டைக் கருகில் வந்ததும் பல்லவ சைன்யம் வாதாபி சைன்யத்துடன் வீரப் போர் புரியுமென்று நமது பிரஜைகள் எதிர்பார்த்தார்கள். அவர்களை நாம் ஏமாறச் செய்து விட்டோம். தந்தையே! இப்போதாவது அவர்களுடைய நம்பிக்கையை மெய்யாக்க எனக்குக் கட்டளை யிடுங்கள். இந்தக் கோட்டைக்குள்ளே ஒரு லட்சம் பல்லவ வீரர்கள் எப்போது போர் வருமென்று துடிதுடித்துக் கொண்டிருக்கிறார்கள். இந் நகரின் மாபெரும் கொல்லர்கள் ஒன்றரை வருஷமாகச் செய்து குவித்திருக்கும் வாள்களும் வேல்களும் 'தாகம், தாகம்' என்று தவிக்கின்றன. எதிரிகளின் நெஞ்சில் பாய்ந்து அவர்களுடைய இரத்தத்தைக் குடித்துத் தாகத்தைத் தணித்துக் கொள்ளும் நேரம் எப்போது வரும்



வருமென்று லட்சக்கணக்கான வாள்களும் வேல்களும் காத்துக் கொண்டிருக்கின்றன. இதோ என் உயிர்த் தோழர் பரஞ்சோதியும் துடி துடித்துக் கொண்டிருக்கிறார். ஐயா! சைன்யத்தை நடத்திக் கொண்டு போகக் கட்டளையிடுங்கள். வாதாபி சைன்யத்தை நிர்மூலம் செய்ய இந்த க்ஷணமே ஆக்ஞை இடுங்கள்!''

மகேந்திர பல்லவர் உணர்ச்சி மிகுதியினால் பேச முடியாமல் தத்தளித்தார். தமது அருமைக் குமாரனுடைய வீராவேச மொழிகளைக் கேட்டு அவருடைய இருதயம் கனிந்து விட்டதாகத் தோன்றியது. ஆயினும், பல்லைக் கடித்துக்கொண்டு, முகத்தையும் கடுமையாக வைத்துக்கொண்டு அவர் சொன்னார்:—''குழந்தாய்! சுத்த வீரன் சொல்லக்கூடிய வார்த்தைகளை நீ பேசினாய்; அதைக் குறித்து எனக்குச் சந்தோஷந்தான். ஆனாலும், உன் யோசனையை நான் ஒப்புக்கொள்வதற்கில்லை. பல்லவ நாட்டு வீரப் பிரஜைகளின் அபிப்பிராயத்தைப் பற்றிச் சொன்னாய். அதைப் பற்றியும் சந்தோஷந்தான். ஆனால் பிரஜைகளின் அபிப்பிராயம் எப்போதும் சரியான அபிப்பிராயமாயிராது. முன் யோசனையின்றி மூடத்தனமாய்ப் பிரஜைகள் சொல்லும் பேச்சைக் கேட்டு, இந்த நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் அவர்களுடைய சந்ததிகளுக்கும் எல்லையற்ற கஷ்ட நஷ்டங்களை நான் உண்டாக்கப் போவதில்லை!''

இவ்விதம் மாமல்லரைப் பார்த்துச் சொன்னவர், சபையோரின் பக்கம் திரும்பி, ''சபையோர்களே, உங்களுடைய சம்மதத்தை எதிர்பார்த்து நான் வாதாபி சக்கரவர்த்திக்கு ஏற்கெனவே மறுமொழி அனுப்பிவிட்டேன். அவருடைய சமாதானத் தூதை ஏற்றுக் கொள்வதாகவும் அவரைக் காஞ்சிமா நகருக்குள் நமது விருந்தாளியாக வரவேற்க மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொள்வதாகவும் ஓலை எழுதி அனுப்பிவிட்டேன். அவ்விதம் நான் கொடுத்த வாக்கை இனி மீற முடியாது!'' என்றார்.

மாமல்லர் அப்போது முன்னை விட அதிக பரபரப்புடன், ''அப்பா! இது என்ன? பல்லவ வம்சத்தின் ஜன்ம சத்ருவை நமது தலை நகரத்தில் வரவேற்பதா? புலிகேசிக்கு உபசாரமா? வேண்டாம், வேண்டாம் யுத்தத்தை நிறுத்திச் சமாதானம் செய்து கொள்ளுங்கள். அத்துடனாவது நிறுத்திக் கொள்ளுங்கள். வாதாபிப் படை இந் நாட்டை விட்டு ஒழியும் வரையில் நாம் கோட்டைக்குள்ளேயே வேணுமானாலும் ஒளிந்து கொண்டிருப்போம். ஆனால் வஞ்சகப் புலிகேசியுடன் சிநேகம் வேண்டாம். அந்த ராட்சதனை வரவேற்று உபசரிப்பது வேண்டாம். வைஜயந்தி பட்டணத்துக்கு நெருப்பு வைத்த பாதகன் இந்தப் புண்ணிய நகரத்துக்குள் காலடி வைக்க வேண்டாம்'' என்று அலறினார்.

''முடியாது, மாமல்லா! முடியாது! பல்லவ குலத்தினர் ஒரு தடவை கொடுத்த வாக்கை மீறுவது வழக்கமில்லை. புலிகேசியை நான் வரவேற்றே யாகவேண்டும்'' என்றார் மகேந்திரர்.

இதைக் கேட்ட மாமல்லர் ஒரு அடி முன்னால் பாய்ந்து வந்தபோது சபையோர் ஒரு கணம் திடுக்கிட்டுப் போய் விட்டார்கள். தந்தையைத் தாக்குவதற்கே அவர் பாய்கிறாரோ என்று சிலர் பயந்தே போனார்கள். ஆனால், அப்படி ஒன்றும் நேரவில்லை.

''தந்தையே! வாதாபி சக்கரவர்த்தியைத் தாங்கள் வரவேற்றே யாகவேண்டுமானால், எனக்கு ஒரு வரம் கொடுங்கள். புலிகேசியும் நானும் ஏக காலத்தில் இந் நகருக்குள்ளே இருக்க முடியாது. புலிகேசி உள்ளே வரும்போது நான் வெளியே போய் விடுவதற்கு அனுமதி கொடுங்கள்!'' என்றார் மாமல்லர்.

''நானும் அப்படித்தான் யோசித்து வைத்திருக்கிறேன், குமாரா! வாதாபி சக்கரவர்த்தி வரும்போது நீ இங்கே இருந்தால் ஏதாவது விபரீதம் வந்தாலும் வரும் என்பது உண்மைதான். உன்னை அப்போது வெளியே அனுப்பிவிடுவதாகத்தான் உத்தேசித்திருக்கிறேன். அதற்கு வேறொரு அவசியமும் இருக்கிறது.''

இச்சமயத்தில் தளபதி பரஞ்சோதியும் ஒரு அடி முன்னால் வந்து, ''பிரபு! எனக்கும் குமார சக்கரவர்த்தியுடன் வெளியேற அனுமதி தரவேண்டும்!'' என்று கேட்க, மகேந்திரர் கூறினார்:—

''ஆஹா! அப்படியே! இராமன் போகும் இடத்துக்கு லக்ஷ்மணனும் தொடர்ந்து போக வேண்டியது

நியாயந்தானே! நீங்கள் இருவரும், நமது சைன்யத்தில் மிகச் சிறந்த முப்பதினாயிரம் வீரர்களைப் பொறுக்கிக்கொண்டு ஆயத்தமாகுங்கள். வடநாட்டு மன்னன் படையெடுத்த சமயம் பார்த்துக் கோழைத்தனமாகவும் திருட்டுத்தனமாகவும் பல்லவ இராஜ்யத்துக்குள் பிரவேசித்த தென் பாண்டிய நாட்டாருக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும். சீக்கிரமாகவே புறப்பட ஆயத்தமாகுங்கள்!"

சக்கரவர்த்தியின் கடைசி வாக்கியங்கள், மாமல்லனுடைய கோபத்தைத் தணித்து அவனுடைய ஏமாற்றத்தைப் போக்கி ஓரளவு உற்சாகத்தையும் அளித்தன. அத்துடன் மந்திரி மண்டலத்தாரையும் ஒரே ஆச்சரியக் கடலில் ஆழ்த்தி விட்டன.

பதினோராம் அத்தியாயம்

## வரவேற்பு

அன்றிரவு வெகு நேரத்துக்குப் பின் அந்தப்புரத்தில் மகேந்திர பல்லவர் தமது பட்டமகிஷியைச் சந்தித்தபோது, புவனமகாதேவி இத்தனை காலமும் இல்லாத கவலையைத் தெரிவித்தாள். "பிரபு, இன்றைக்கு மந்திராலோசனை சபையில தங்களுக்கும் மாமல்லனுக்கும் பெரிய வாக்குவாதம் நடந்ததாமே! நாலு பேருக்கு முன்னால் அப்பாவும் பிள்ளையும் இப்படிச் சண்டை போட்டுக் கொள்ளலாமா?" என்று சக்கரவர்த்தினி கேட்டாள்.

"தேவி! யார் என்ன வேணுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். எனக்கு இன்றைக்கு இருக்கிற பெருமையையும் பூரிப்பையும் சொல்லி முடியாது. அர்ஜுனனும் அபிமன்யுவும் லக்ஷ்மணனும் இந்திரஜித்தும் பேசத் தகுந்த வீர வார்த்தைகளை இன்று மாமல்லன் பேசினான். உள்ளுக்குள் எனக்கு எவ்வளவோ ஆனந்தமாயிருந்தது. ஆனாலும், என்னுடைய நோக்கத்தை நான் கைவிட்டு விடுவதற்கில்லை. ஆகையால், என்னுடைய ஆனந்தத்தை வெளியே காட்டாமல் கடுமையாகவும் கண்டிப்பாகவும் பேச நேர்ந்தது" என்றார் சக்கரவர்த்தி.

"உங்களுடைய நோக்கந்தான் என்ன? சபையில் நடந்ததெல்லாம் நானும் கேள்விப்பட்டேன். நீங்கள் செய்யப் போகும் காரியம் எனக்குங் கட்டோடே பிடிக்கவில்லை. நம்முடைய ஜன்ம சத்துருவையாவது, காஞ்சி நகருக்குள் வரவேற்பதாவது!" என்றாள் புவன மகாதேவி.

"தேவி! இது என்ன வார்த்தை? சத்துருவாக வந்தவரை மித்திரராகத் திருப்பியனுப்புவது பல்லவ வம்சத்துக்குப் பெருமை அல்லவா? என்னுடைய நோக்கம் என்னவென்று கேட்டாயே? சொல்கிறேன், கேள்: என்னுடைய வாழ்நாளில் உலகத்தில் மீண்டும் சத்திய யுகம் பிறப்பதைக் காண வேண்டும் என்பதுதான் என் நோக்கம். இந்தப் பரந்த பாரத பூமியில் இன்றைய தினம் மூன்று பெரிய சாம்ராஜ்யங்கள் இருக்கின்றன. நர்மதைக்கு வடக்கே ஹர்ஷவர்த்தனர். நர்மதைக்கும் துங்கபத்ராவுக்கும் மத்தியில் சத்யாஸ்ரய புலிகேசி. துங்கபத்திரைக்குத் தெற்கே மகேந்திர பல்லவன். இந்த மூன்று பேரும் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டிருக்கும் பட்சத்தில் இந்தப் புண்ணிய பூமி நரக பூமியாயிருக்கும். பஞ்சமும் பிணியும் ஜனங்களைப் பிடுங்கித் தின்னும். அப்படியில்லாமல், இந்த மூன்று பேரும் சிநேக தர்மத்துக்குக் கட்டுப்பட்டவர்களாயிருந்தால், இந்த பாரத பூமியே சொர்க்க பூமியாகி விடும். தேசத்தில் வறுமை என்பதே இராது; பட்டினி என்பதே இராது; பஞ்சம் என்பதே இராது. சகல ஜனங்களும் சௌக்யமாக வாழ்வார்கள். கல்வியும் கலைகளும் ஓங்கி வளரும். தேவி! என் இளம் பிராயத்தில் நான் ஒரு பகற் கனவு காண்பது உண்டு. சளுக்க சக்கரவர்த்தியின் விருந்தாளியாக நான் சென்று அஜந்தாவின் வர்ணச் சித்திர அதிசயங்களைக் கண்டு களிப்பதாகக் கனவு கண்டேன். அப்புறம், வடக்கே கன்யாகுப்ஜத்துக்குச் சென்று ஹர்ஷவர்த்தனர் மூன்று வருஷத்துக்கு ஒரு தடவை நடத்தும் ஆனந்தக் கலைவிழாவைப் பார்ப்பதாகக் கனவு கண்டேன். மாமல்லபுரத்தை ஒரு சொப்பனக்

கலையுலகமாகச் சிருஷ்டித்து அதைப் பார்ப்பதற்காக ஹர்ஷரையும் புலிகேசியையும் அழைப்பதாகக் கனவு கண்டேன். அதெல்லாம் இப்போது நிறைவேறும்போல இருக்கிறது. ஹர்ஷர் பௌத்த சங்கத்தைச் சேர்ந்தவர்; புலிகேசியோ சமணமதத்தைச் சேர்ந்தவர்; நானோ சைவன். நாங்கள் மூன்று பேரும் சிநேகிதர்களாகி விட்டால் அப்புறம் இந்த நாட்டில் சமயச் சண்டை என்பதுதான் ஏது?''

"பிரபு! அன்பு மதத்தையும் சிநேக தர்மத்தையும் பற்றிப் பேசும் தாங்கள் பாண்டியனைத் தண்டிப்பதற்கு மாமல்லனை எதற்காகப் போகச் சொல்லுகிறீர்கள்?'' என்று சக்கரவர்த்தினி குறுக்கிட்டுக் கேட்டாள்.



"ஆஹா! அது வேறு விஷயம். ஒரேகம் என்பது சமானஸ்தர் களுக்குள்ளேதான் ஏற்பட முடியும். அறிவாளிகளுக் குள்ளேதான் அன்பு வளர முடியும். அறிவற்ற மூடர்களையும் அதிகப் பிரசங்கி களையும் தண்டோபாயத்தினால்தான் சீர்திருத்தியாக வேண்டும்" என்று கூறினார் மகேந்திர பல்லவர்.

மறுநாள் முதல் காஞ்சி நகரம் ஒரு புதிய தோற்றத்தை மேற் கொண்டது. ஏதோ ஒரு பெரிய முக்கியமான திருவிழாவை எதிர் பார்ப்பதுபோல ஜனங்களிடையே அபரிமிதமான உற்சாகம் காணப் பட்டது. தெரு வீதிகளையும் வீடு வாசல்களையும் சிங்காரிக்கத் தொடங் கினார்கள். கடை வீதிகள் பழையபடி



சோபை பெற்று விளங்கின. கோவில்களில் உற்சவங்கள் ஆரம்பமாயின. சிற்ப மண்டபங்களில் பழையபடி சிற்பிகள் வேலை செய்யத் தொடங்கினார்கள். நாலாபுறமும் மேள வாத்தியங்கள் முழங்கின. சம்ஸ்கிருத கடிகைகளில் முன்போல வேத கோஷங்கள் கிளம்பின. தமிழ்க் கல்லூரிகளில் பாசுரங்கள் பாடப்பட்டன. நடன அரங்கங்களும் நாடக மேடைகளும் புத்துயிர் பெற்றன. ஆங்காங்கு தாளச் சத்தத்துடன் கலந்து பாதச் சதங்கையொலியும் எழுந்தது.

ஜனங்களின் முக மலர்ச்சியையோ சொல்ல வேண்டியதில்லை. எல்லாரும் ஒரே ஆனந்த மயமாகக் காணப்பட்டார்கள். புருஷர்களும் ஸ்திரீகளும் முன்போல ஆடையாபரணங்களால் தங்களை அலங்கரித்துக் கொள்ளத் தொடங்கினார்கள். பெண்களின் கூந்தலில் புஷ்பக் காடுகள் மலர்ந்து நாலாபுறமும் சுகந்தத்தைப் பரப்பின.

மொத்தத்தில், மாமல்லர் எதிர்பார்த்ததுபோல் காஞ்சி நகர மக்கள் சிறிதும் அதிருப்தியடைந்தவர்களாகத் தெரியவில்லை. யுத்தம் ஒருவாறு நின்றுவிட்டதில் அவர்கள் பெரிதும் மகிழ்ச்சியடைந்தவர்களாகக் காணப்பட்டார்கள். அதைக் காட்டிலும், சளுக்க சக்கரவர்த்தி காஞ்சிக்கு விஜயம் செய்யப்போவதை நினைத்து அந்நகரின் ஜனங்கள் அபரிமிதமான களிப்படைந்தவர்களாகத் தோன்றினார்கள்.

• • •

புலிகேசியின் சமாதானத் தூதன் வந்த ஐந்தாம் நாள் பிற்பகலில், காஞ்சி நகரின் வடக்குக் கோட்டை வாசல் எட்டு மாதத்திற்குப் பிறகு மீண்டும் திறந்தது. பேரிகைகளும், நகராக்களும், சமுத்திர கோஷம், கடுமுகம் என்னும் வாத்தியங்களும் நெடுந்தூரத்திற்கு நெடுந்தூரம் உள்ளவர்களின் காது செவிடுபடும்படி ஒலித்தன. வாதாபிச் சக்கரவர்த்தி தாம் இளம் பிராயத்திலிருந்து பார்க்க ஆசைப்பட்டுக் கொண்டிருந்த கல்வியிற் பெரிய காஞ்சிமா நகரத்திற்குள் பிரவேசம் செய்தார். அவருடைய முக்கிய பரிவாரத்தைச் சேர்ந்தவர்களான ஐம்பது பேர் மட்டும் அவருடன் நகரத்துக்குள் வந்தார்கள்.

வெளிவாசலைத் தாண்டி உள்ளே பிரவேசித்ததும், அங்கே தம்மை வரவேற்பதற்கு ஆயத்தமாகக் காத்துக்கொண்டிருந்த மகேந்திர பல்லவ சக்கரவர்த்தியைப் புலிகேசி பார்த்தார். அவ்விரண்டு மாமன்னர்களின் கண்களும் சந்தித்தன. மகேந்திரரின் முகத்தில் அரும்பியிருந்த இளம் புன்னகையைத் தவிர வேறு எவ்வித உணர்ச்சியும் வெளியாகவில்லை. ஆனால், புலிகேசியின் முகமானது அவருடைய கொதிப்படைந்த உள்ளத்தின் கொந்தளிப்பை நன்கு காட்டுவதாய் இருந்தது. "என்னுடைய ஜன்ம சத்துரு, நான் போட்டுக்கொண்டு வந்த திட்டங்களையெல்லாம் தோல்வியடையச் செய்த மகேந்திர பல்லவன் இவன்தானா?" என்று புலிகேசியின் உள்ளத்தில் உண்டான ஆத்திரத்தை அவருடைய கண்கள் பிரதிபலித்தன. இந்த எண்ணங்களோடு, "ஆஹா! கள்ளங் கபடு அறியாததுபோல் நடிக்கும் இந்தக் கம்பீர முகத்தை இதற்கு முன் எப்போது எங்கே பார்த்திருக்கிறோம்?" என்ற நினைவும் புலிகேசியின் மனதில் தோன்றியது.

இரு சக்கரவர்த்திகளின் விருதுகளும் முறையே கூறப்பட்ட பிறகு, இருவரும் அவரவர்களுடைய குதிரைகளிலிருந்து கீழே இறங்கி ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்துகொண்டார்கள். அதே சமயத்தில் புலிகேசியின் கண்கள் மகேந்திர பல்லவருக்குப் பின்னால் நின்ற பரிவாரங்களைத் துருவி ஆராய்ந்தன. "சத்தியாஸ்ரயா! யாரைத் தேடுகிறீர்கள்?" என்று மகேந்திர பல்லவர் கேட்க, "பல்லவேந்திரா, தங்களுடைய வீரப் புதல்வன் நரசிம்மனைப் பற்றி எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த மகா வீரன், இங்கு நிற்பவர்களிலே யாரோ?" என்று சளுக்க சக்கரவர்த்தி கேட்டார்.

மகேந்திர பல்லவர் அப்போது இளஞ் சிரிப்புச் சிரித்து, "இல்லை, ஐயா! மாமல்லன் இங்கே இல்லை. அவன் வேறு முக்கிய காரியமாக வெளியூர் சென்றிருக்கிறான்" என்றார்.

# சேனாபதி

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

கோவிந்தன் ஹஸ்தினாபுரத்தில் நடந்த விஷயங்களைப் பாண்டவர்களுக்குச் சொன்னான்: "உண்மையைச் சொன்னேன்; ஹிதத்தைச் சொன்னேன்; ஒரு பயனுமில்லை. இனி நான்காவதும் கடைசியானதுமான தண்டப் பிரயோகம் தவிர வேறு வழியில்லை. அவனுக்கு எது நன்மையோ அதைச் சொல்லியும், மூடனான துரியோதனன் கேட்கவில்லை. சபையிலுள்ள பெரியோர்கள் அனைவரும் சொல்லியும் புறக்கணித்து விட்டான். இனி யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் தாமதமின்றி நடைபெற வேண்டும். குருக்ஷேத்திரம் பலிக்குக் காத்திருக்கிறது" என்றான்.

• • •

"புருஷ சிரேஷ்டர்களே! இனி சமாதான ஆசை இல்லை. நம்முடைய சேனையை அணி வகுப்பீர்களாக!" என்று யுதிஷ்டிரர் தம்பிகளுக்குக் கட்டளையிட்டார்.

சேனையை ஏழு பாகமாகப் பிரித்து அவற்றிற்கு முறையே துருபதன், விராடன், திருஷ்டத்யும்னன், சிகண்டி, சாத்யகி, சேகிதானன், பீமசேனன் ஆகிய ஏழு நாயகர்களை அமைத்தார்கள். பாண்டவ சேனாபதியாக யாரை அபிஷேகம் செய்வது என்று ஆலோசித்தார்கள்.

"சகதேவ! இந்த ஏழு பேர்களுள் ஒருவனைப் பொறுக்கியெடுத்துச் சேனாபதியாக அமைக்கவேண்டும். எல்லாச் சேனைகளையும் சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி நடத்த வல்லவனும் நெருப்பைப் போல் பகைவர்களை எரிக்கும் பீஷ்மரைத் தாங்கக்கூடியவனுமான ஒருவன் நமக்குச் சேனாபதியாக இருக்க வேண்டும். உன்னுடைய அபிப்பிராயத்தில் இதற்கு யார் தகுந்தவர்?" என்று யுதிஷ்டிரர் முதலில் சகதேவனைக் கேட்டார்.

அபிப்பிராயங்களை அறிவதற்கு இளையவர்களை முதலில் கேட்டு அதன் பிறகே பெரியோர்களையும் முதிர்ந்தவர்களையும் கேட்பது பழைய வழக்கம். சிறுவர்களுக்கு உற்சாகமும் தன்னம்பிக்கையும் வளருவதற்கு இதுவே சரியான கிரமம். முதலில் பெரியோர்களைக் கேட்டு விட்டால் அதன்பின் மற்றவர்களுக்குச் சொல்ல இடமிருக்காது. அவர்கள் ஏதேனும் சொன்னால் அது வினயத்துக்குப் பாதகமாகும்.

சகதேவன், "அஞ்ஞாத வாசத்தில் எந்த ராஜாவை அடுத்திருந்தோமோ, எவருடைய நிழலில் நின்று நாம் மறுபடியும் நம்முடைய பாகத்தைக் கேட்கிறோமோ அந்த விராட ராஜாவையே சேனாபதியாக அபிஷேகம் செய்யலாம்" என்றான்.

நகுலனைக் கேட்க, அவன் சொன்னதாவது: "வயதிலும், அறிவிலும், தைரியத்திலும், குலத்திலும், பலத்திலும் சிறந்தவரான துருபதராஜாவைச் சேனாபதியாக்குவது உசிதம் என்று எனக்குத் தோன்றுகிறது. பரத்வாஜரிடமிருந்து அஸ்திரங்கள் கற்றவரும், துரோணரை எதிர்க்கவேண்டும் என்றே அநேக காலமாகக் காத்திருப்பவரும் அரசர்களால் மிக மதிக்கப்பட்டுச் சிறப்பு வாய்ந்தவரும், கிருஷ்ணையின் பிதாவும், நமக்கும் பெற்ற பிதாவைப்போல் ஆதாரமாய் இருப்பவருமான துருபதரே நம்முடைய சேனையின் முன்னணியில் நின்று துரோணரையும் பீஷ்மரையும் தாங்கக் கூடியவர்" என்றான். பிறகு தருமபுத்திரர் தனஞ்சயனைப் பார்த்தார்.

"இந்திரியங்களை வென்றவனும் துரோணருடைய முடிவுக்கென்றே தோன்றிய வீரனுமான திருஷ்டத்யும்னன் நம்முடைய சேனாபதியாக இருக்க



வேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம். பரசுராமரைத் தயங்கச் செய்த பீஷ்மருடைய பாணங்களைத் தாங்கக்கூடியவன் திருஷ்டத்யும்னனே. துருபத புத்திரனைத் தவிர பிதாமகரை எதிர்க்கத் தகுந்தவன் வேறு யாரும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அவனே இந்தப் பதவிக்குத் தகுதியுடையவன்" என்று அருச்சுனன் வற்புறுத்திச் சொன்னான்.

பீமன், "அரசரே! அருச்சுனன் சொன்னது சரியே. ஆயினும் பீஷ்மருடைய வதத்திற்காகவே துருபதனுக்கு மகனாக உண்டானான் என்று சிகண்டியைப் பற்றி ரிஷிகளும் பெரியோர்களும் சொல்லுகிறார்கள். பரசுராமரைப் போன்ற தேஜசு பொருந்திய தோற்றத்தைப் படைத்த அந்த வீரனைத் தலைவனாக அமைப்பதே என்னுடைய யோசனை. சிகண்டியைத் தவிர வேறு எவனும் பீஷ்மரைத் தோல்வியடையச் செய்ய முடியாது" என்றான்.

"கேசவனுடைய யோசனை என்ன?" என்று முடிவாகக் கேட்டான் யுதிஷ்டிரன்.

"இவர்கள் சொல்லிய யாவருமே சேனாபதி யாவதற்குத் தகுந்தவர்கள். எல்லோருமே துரியோதனாதியருக்குப் பயத்தை உண்டாக்கத் தக்கவர்கள். மொத்தத்தில் அருச்சுனன் சொன்னதை நான் அங்கீகரிக்கிறேன். திருஷ்டத்யும்னனைச் சேனாபதியாக அபிஷேகம் செய்யலாம்" என்றான் கிருஷ்ணனும்.

சுயம்வரத்தில் திரௌபதியை அருச்சுனனுக்குக் கையைப் பிடித்துத் தந்தவனும் பாஞ்சாலிக்கு அரசர் சபையில் செய்யப்பட்ட கொடுமைக்குப் பழி தீர்க்கும் காலம் எப்போது வரப்போகிறது என்று பதின்மூன்று வருடங்கள் காத்திருந்தவனுமான துருபத ராஜனுடைய வீர குமாரன் திருஷ்டத்யும்னனை பாண்டவ சேனைக்குத் தலைவனாக அமைத்து அபிஷேகம் செய்தார்கள். வீரர்கள் செய்த சிம்ம நாதங்களும், சங்கத்வனிகளும், துந்துபி முழக்கமும் ஆகாயத்தைப் பிளந்தது. பெரும் ஆரவாரத்துடன் பாண்டவ சேனை குருக்ஷேத்திரம் புகுந்தது.

கௌரவ சேனைக்குப் பீஷ்மர் சேனாதிபத்தியம் வகித்தார். துரியோதனன் அஞ்சலிசெய்து வணங்கி, "தேவர்களைக் கார்த்திகேயன் தலைமை வகித்து நடத்தியவாறு பிதாமகர் எங்களுக்கு நாயகராயிருந்து வெற்றியும் புகழும் பெறுவாராக. ரிஷபத்தின் பின் கன்றுகள் செல்லுவது போல நாங்கள் பீஷ்ம பிதாமகரின் பின் செல்வோம்" என்றான்.

"அப்படியே ஆகுக" என்றார் பீஷ்மர். "ஆனால், என்னுடைய ஒரு நிச்சயத்தை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். திருதராஷ்டிரர்களான நீங்கள் எப்படியோ அப்படியே எனக்குப் பாண்டு புத்திரர்களும். உங்களுக்கு நான் செய்து கொடுத்த பிரதிஜ்ஞைப்படி யுத்தத்தை நடத்தி என் கடனைத் தீர்ப்பேன். என் உயிருள்ள வரையில் நான்தோறும் யுத்த களத்தில் பதினாயிரக் கணக்கான போர் வீரர்கள் என் பாணங்களுக்கு இரையாவார்கள். ஆயினும் பாண்டு புத்திரர்களை நான் என் கையால் கொல்ல முடியாது. இந்த யுத்தம் என் சம்மதத்தைப் பெற்றதன்று. பாண்டவர்களை நானாகக் கொல்லாமல் மற்றக் கடமைகளை யெல்லாம் செய்வேன். மற்றொரு விஷயம். உங்களுக்கு மிகவும் பிரியனான சூதபுத்திரன் எப்போதும் என் யோசனைகளை எதிர்ப்பவனாக இருக்கிறான். அவனை முதலில் கேளுங்கள். அவன் தலைமை வகித்து யுத்தத்தை முதலில் நடத்தலாம். எனக்கு ஆட்சேபனை இல்லை" என்றார் பிதாமகர்.

"பீஷ்மர் உயிருடன் இருக்கும் வரையில் நான் விலகி நிற்பேன். அவருடைய வீழ்ச்சிக்குப் பிறகு நான் வருவேன். அப்போது அருச்சுனனை எதிர்த்து அவனை வீழ்த்துவேன்" என்பது அகம்பாவத்தால் பிடிக்கப்பட்ட கர்ணனுடைய பிடிவாதம்.

சிறந்த பல நற்குணங்களைப் படைத்தவர்களுங் கூடச் சமானஸ்தர்களிடம் பொறாமைப் படுவதும் மேம்பட்டவர்களிடம் அசூயை கொள்வதும் அந்தக் காலத்திலும் இருந்தது.

துரியோதனன் பீஷ்மர் சொன்ன நிபந்தனைக்கு ஒப்புக்கொண்டு அவரைச் சேனாபதியாக அபிஷேகம் செய்தான். பிதாமகர் தலைமை வகித்த கௌரவ சேனையும் சமுத்திரத்தைப்போல் குருக்ஷேத்திரத்தில் பிரவேசித்தது.

# அடுக்கு மல்லிகை

எ.டி. சிந்தாமணி



மணி ஏழரை இருக்கும். ஆபீஸ் ரூமில் உட்கார்ந்து கொண்டு படித்துக் கொண்டிருந்தேன். மனம் நிம்மதியாக இருக்கவில்லை. என்னவெல்லாமோ பழைய ஞாபகங்கள் மனக் கண் முன் வந்து கொண்டிருந்தன. சாப்பிடக் கூப்பிடுவதற்காக சஹதர்மிணி சாரதா உள்ளே பிரவேசித்தாள். என்றைக்குமில்லாத புது அழகுடன் அவள் விளங்கியதன் காரணம் எனக்குப் புலப்படவில்லை. நான் ஒன்றும் பேசாமல் அவளைப் பார்த்த வண்ணமே யிருந்தேன். தலை நிறைய மல்லிகைப்பூச் சூட்டிக் கொண்டிருந்தாள். வாசனை ஊரையே கொள்ளை கொள்ளும் போலிருந்தது. அந்த வாசனையை என்னால் தாங்க முடியவில்லை.

மல்லிகைப்பூ வாசனை என் மன நிலையையே சிறிது தளர்த்திவிட்டது. "ஒரு மாதிரி இருக்கிறீர்களே! உடம்புக்கென்ன?" என்று கேட்டாள் சாரு.

"உடம்பு ஒன்றுமில்லை! சாரு! உனக்கேது இந்த மல்லிகைப்பூ? விலைக்கு வாங்கினாயா, அல்லது யாராவது கொடுத்தார்களா?" என்று கேட்டேன்.

"இல்லை, நம் தோட்டத்தில் பூத்தது! போன தரம் ஊரிலிருந்து கொண்டுவந்த பதியம்; அடுக்கு மல்லிகை வாசனை எப்படி?" என்றாள் சாரு.

எனக்கு அடுக்கு மல்லிகை என்றதுமே தூக்கி வாரிப்போட்டது. பழைய சம்பவம் அப்படியே கண் முன் நின்றது.

"உடம்புக்கென்ன? சொல்லுங்களேன்!" என்று படபடத்தாள் சாரு.

"சாரு! இனிமேல் அடுக்கு மல்லிகைப் பூவை வைத்துக் கொள்ளாதே! வேறு எந்தப் பூவை வேணுமென்றாலும் வைத்துக்கொள்! அடுக்கு மல்லிகை மட்டும் வேண்டாம்!" என்றேன்.

"நன்றாயிருக்கிறது! மல்லிகைப் பூவையா வேண்டாம் என்கிறீர்கள்?"

"ஆமாம், சாரு! அடுக்கு மல்லிகையைப் பார்த்தால் மூர்த்தியின் ஞாபகம் வருகிறது. அது வேண்டாம்!" என்றேன்.

"விவரமாகச் சொன்னால்தானே விஷயம் புரியும்? சொல்லுங்களேன்!" என்றாள்.

"மூர்த்தி என் பழைய நண்பன். அவன் இறந்து போய்ச் சுமார் பத்துப் பன்னிரண்டு வருஷம் ஆய்விட்டது. அதோ, அந்த நாலாவது போட்டோவில் எனக்கு வலப்பக்கம் சிரித்த முகத்துடன் நின்று கொண்டிருக்கிறானே, அவன்தான் என் நண்பன் மூர்த்தி, பார்!" என்றேன்.

சாரு போட்டோவைக் கவனித்தாள். "சின்ன வயசு. முகம் பிரகாசமாயிருக்கிறது. பாவம், அவர் என்னவானார் சொல்லுங்களேன்!" என்று கேட்டாள் சாரு.

எனக்கும் அவனைப் பற்றிச் சிறிது கூறினால்தான் மனம் நிம்மதி யடையும் போலிருந்தது. ஆகவே கதையைச் சொல்லத் தொடங்கினேன்.

* * *

நான் இப்போது வேலை பார்த்து வரும் காலேஜில்தான் படித்துப் பட்டம் பெற்றது. இண்டர்மீடியட், பி. ஏ. எல்லாம் இங்கேயே படித்தேன் ...... முதல் வகுப்பில் பாஸ் செய்ததனால், பாஸ் செய்த மறு



வருஷமே என்னைக் காலேஜில் வேலைக்குக் கூப்பிட்டார்கள்.

இண்டர் மீடியட் வகுப்பில் எனக்கு ஒரு சிறந்த நண்பன் கிடைத்தான். முதல் நாளிலேயே எங்கள் இருவருக்கும் பழக்க மாகி விட்டது. சிநேகம் முதிர்ந்து கொண்டே வந்தது. இவ்வளவு நல்ல நண் பன் கிடைத்ததில் எனக்குச் சந்தோஷத் துடன் கூடப் பெருமையும் இருந்தது.

எங்கள் நட்பில் ஒரு விசேஷம். நாங்கள் அத்யந்த நண்பர்களானாலும் அனேகமாக எந்த விஷயத்திலும் எங்களிருவருக்கும் அபிப்பிராய பேதம் நேரிடுவதுண்டு. அந்த அபிப்பிராய பேதங்களெல்லாம் எங்க ளுடைய சிநேகத்தை வளர்த்தே வந்தன.

மூர்த்தி ஒரு கலைப் பித்தன். கலைக்காக உயிரையும் கூடத் தியாகம் செய்துவிட வேண்டும் என்பது அவன் கொள்கை. எப் பொழுதும் கலை சம்பந்தமாக எதாவது பேசிக் கொண்டே யிருப்பான். “காதல் என்பது தெய்வீகம். வாழ்க்கையில் ஒரு முக் கிய அம்சம்” என்பான் மூர்த்தி. “காத லாவது கத்தரிக் காயாவது? வெறும் கவிக் கனவு! வாழ்க்கை யில் அனுபவத்தில் கொண்டுவர முடியாது” என்பது என் கட்சி.

இயற்கைக் காட்சிகளைக் கண்டு விட்டால் அவனுக்கு ஆனந்தம். நிலாக் காலங்களில் இரவு ஒன்ப தரை மணி வரையில் ‘பார்க்’கில் உட்கார்ந்து கொண்டு ஆனந்த மாகப் பாடிக் கொண்டிருப்பது வழக்கம். அழகிய மலர்கள் என் றால் அவனுக்கு மிக்க பிரியம். எந்தப் பூவானாலும் அதைச் சட்டையில் செருகிக் கொள் வான். இல்லாவிட்டால் கையில் வைத்துக் கொண்டே அழகு பார்ப்பான். இது எனக்குப் பிடிக்காது. செடியில் இருக்கும் போதுதான் பூவிற்கு அழகு என் பது என் கொள்கை.

நவம்பர் மாதத்தில் அந்தச் சம்பவம் நடந்தது. இரண்டு நாள் மழை பெய்து செடி கொடிக ளெல்லாம் தழைத்து எங்கு பார்த் தாலும் பச்சைப் பசேலென்று இருந்தது. செடி கொடிகளெல் லாம் புதுத் தளிர்களை விட்டுச் சோபையுடன் விளங்கிக் கொண்டிருந்தன. பூச்செடிகள் சில பூத்தும், சில அரும்பியும் இருந்தன.

ஒருநாள் மாலை வழக்கம்போல டென்னிஸ் ஆட ஆயத்தம் செய்து கொண்டிருந்தேன். மூர்த்தியும் நன்றாக ஆடுவான். வழக்கம் போல் என் அறைக்கு மூர்த்தி வந்தான். அவனைப் பார்த்தால் விளையாட்டிக்கு வருவ தாகத் தோன்றவில்லை. கையில் டென் னிஸ் ராக்கட்டைக் காணவில்லை. எப் பொழுதும் போன்ற பிரகாசம் இல்லை.

“என்ன மூர்த்தி! டென்னிஸிற்கு வர வில்லையா?” என்றேன்.

“இல்லை! இன்று மனசு நிம்மதியாக இல்லை. ஒரு மாதிரியாக இருக்கின்றது. தினந்தான் டென்னிஸ் ஆடுகிறோமே! வா! இன்றைக்கு வெளியே உலாவப் போகலாம். வெளியில் போனால்தான் மனம் நிம்மதி யடையும்” என்றான்.

“மூர்த்தி! என்றைக்கும் இந்த மாதிரி பேசினதில்லையே! ஏன் ஒரு மாதிரியா யிருக்கிறாய்?” என்று கேட்டேன்.

"போகும்போது சொல்கிறேன். வா!" என்றான்.

இரண்டு பேரும் புறப்பட்டோம். மழை பிடித்துக் கொண்டது. ஐந்து நிமிஷம்தான் பெய்தது. அதற்குள் மஞ்சள் வெயில் வந்துவிட்டது. பார்க்கின் வழியாகப் போய்க் கொண்டிருந்தோம். மாலைச் சூரியன் தன்னுடைய பொன்னிறமான கிரணங்களால் சோலையைத் தழுவிக்கொண்டிருந்தான்.

"என் மூர்த்தி! என்ன ஒரு மாதிரியாக இருக்கிறாய்?" என்று நானே ஆரம்பித்தேன்.

"ஒன்றுமில்லை. வகுப்பில் பாடத்தைக் கவனிக்காமல் வெளியே பார்த்துக் கொண்டிருந்தேன். புரொபஸர் ரொம்பக் கடுமையாகக் கோபித்துக் கொண்டார்" என்றான்.

"என்னடா? என்னைத் தினமும்தான் புரொபஸர் 'கலாட்டா' செய்கின்றார். இதற்கா இவ்வளவு?" என்று சமாதானம் செய்தேன்.

அந்த மாலை நேரம் ரம்யமாக இருந்தது. இலைகளின் மேலுள்ள நீர்த் துளிகள் மஞ்சள் வெய்யிலில் வைரங்கள் போல ஜொலித்துக் கொண்டிருந்தன. சிறு சிறு என்று காற்றும் வீசிக் கொண்டிருந்தது. பேசிக்கொண்டே மல்லிகைப் பாத்தியருகில் வந்துவிட்டோம். பச்சை இலைகள் மாசு மறுவின்றி மரகதத் தகடுபோல் பிரகாசித்துக் கொண்டிருந்தன. செடி நிறைய அரும்புகள்; சில மலர்ந்தநிலையில் இருந்தன. அந்தத் தோற்றம் மரகதத் தகட்டில் முத்து வேலை செய்யப்பட்டது போலிருந்தது. பொன்னிறமான சூரியக் கிரணங்களும், பச்சைப் பசேலென்ற சோலையும், பலவித வர்ணப் புஷ்பங்களும் எந்த மனத்தைத்தான் வசீகரிக்காது?

"ரமணி! பார்த்தாயா இந்த மல்லிகைப் பாத்தியை? அரும்பிய பூக்களும், செடியுமே அலாதி அழகுதான். இந்த அடுக்கு மல்லிகைப் பூவைப் பார்!" என்று மலரும் தறுவாயிலிருந்த பூக்கள் இரண்டைச் செடியிலிருந்து மூர்த்தி பறித்தான். எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு முகர்ந்து பார்த்துக் கொண்டிருக்கும் வேளையில், "க்ரணங். க்ரணங்" என்று சைகிள் மணி சத்தம் கேட்டது.

திடீரென்று அந்தத் தோட்ட மேற்பார்வையாளர் சைகிளில் வந்ததை நாங்கள் கவனிக்கவில்லை. அவர் எங்களிருவரையும் கோபமாகப் பார்த்தார். "மிஸ்டர்! இது ரொம்பக் கெட்ட வழக்கம், சார்! இந்த வழக்கத்தை இனி மேலாவது விட்டு விடுங்கள்" என்றார்.

அந்த அதிகாரி ஒரு வேதாந்தி. செடிகளைத் தன் உயிர்போலக் காத்து வந்தார். அவருடைய உத்தரவில்லாமல் யாராவது பூக்களைப் பறித்தால் அவருக்குப் பொறுக்காது. பூக்களைச் செடியிலிருந்தபடியே அநுபவிக்க வேண்டும் என்பது அவர் கொள்கை.

அவர் அந்த மாதிரி சொன்னதும் மூர்த்தி சிரித்துக்கொண்டே, "அது என்ன, சாஸ்வதமாய் எப்பொழுதும் செடியிலேயே இருந்துவிடப் போகிறதா? சீக்கிரம் வாடிக் கீழே விழுந்தானே போகின்றது?" என்றான்.

அந்தப் 'பார்க்' அதிகாரி வேதாந்தம் பேச ஆரம்பித்து விட்டார். "நீர் மட்டும் உலகில் சாஸ்வதமாய் இருந்துவிடப் போகின்றீரா? ஒருநாள் இதே மல்லிகையைப் போல் நீரும் வாடி விழ வேண்டியது தானே?" என்றார். அவர் சொன்ன வார்த்தை எனக்குச் 'சுருக்' கென்று பட்டது.

"ஆம், உலகமே அப்படித்தான்" என்றான் மூர்த்தி.

"சரி! சரி! எனக்குப் பேசிக்கொண்டிருக்க நேரமில்லை, இனிமேல் இந்த மாதிரி




"அப்பா! சட்டென்று ஒரு எலிப் பொறி கொடு! அதோ அந்த பஸ்ஸைப் பிடிக்க வேண்டும்!"

"நம்ம எலிப்பொறியாலே எலியைத் தான் ஸ்வாமி பிடிக்கலாம்; அவ்வளவு பெரிய பஸ்ஸைப் பிடிக்க முடியாது!"

"முட்டாள்தனமான காரியங்கள் செய்ய வேண்டாம்!" என்றார் அவர்.

"இதில் முட்டாள்தனம் என்ன இருக்கிறது? இந்தப் பூ உங்களுடையதாகவே இருக்கட்டும்" என்று அதை இருந்த செடியிலேயே பொருத்தி வைக்கப் போனான்.

"செடியை விட்டு எடுத்ததை மறுபடியும் செடியில் ஒட்டி வைக்க முடியுமா? அப்படிச் செய்தாலும் அது மலருமா? என்ன பைத்தியக்காரத்தனம்?" என்றார் அந்த அதிகாரி.

"சரிதான் ஐயா! உங்கள் பூவை நீரே வைத்துக் கொள்ளும்" என்று அலட்சியமாக விட்டெறிந்து விட்டு, "ரமணி, வா! போகலாம்" என்று கூறிக் கொண்டே மூர்த்தி மேலே நடக்க ஆரம்பித்தான். இரண்டு பேரும் வெகு நேரம் ஒன்றும் பேசாமல் நடந்து கொண்டே போனோம். பிறகு மூர்த்தியே பேச்சை ஆரம்பித்தான்.

"ரமணி! அந்த அதிகாரியின் பேச்சில் உண்மை இருக்கின்றது. இவ்வுலகில் எந்தப் பொருள்தான் சாஸ்வதம்? எல்லாம் அழியக் கூடியதுதானே! நான் என்ன சாஸ்வதமா, அல்லது நீதான் என்ன? இன்றிரவே நான் இறந்துபோய் விட்டால்......?"

"போனால் என்ன! அனுதாபக் கூட்டத்தில் நான் பேசுகின்றேன். நான் போய் விட்டால் நீ பேசு! — மூர்த்தி இதெல்லாம் என்னடா? அவன் சொன்னான் என்று என்னமோ பிரமாதமாக வேதாந்தம் ஆரம்பித்து விட்டாயே? வா, சாப்பாட்டுக்குப் போகலாம்" என்று கூறி அவனை ஹாஸ்டலுக்கு அழைத்துச் சென்றேன்.



வீட்டுக்காரர் (இடம் பார்க்க வந்தவரிடம்):—ஐயா! இந்த இடத்துக்குக் குடித்தனம் வருகிறதா யிருந்தால் பேஷாக வரலாம். ஆனால், இங்கே ரொம்ப அசௌகர்யமாக இருக்குமே! முன்பக்கத்தி லிருக்கிறவர் பிடில்காரர். 'கர்புர்' என்று எப்பொழுதும் பிடிலை இழுத்துக்கொண்டே யிருப்பார். பின்கட்டில் இருப்பவர் மிருதங்கக்காரர். 'டும் டும்' என்று ஓயாமல் மிருதங்கத்தைத் தட்டித் தலைவலி உண்டாக்கிவிடுவார்.

வந்தவர்:—பேஷ்! நானொரு சங்கீத வித்வான். இடத்துக்கு இடமுமாச்சு; பக்க வாத்தியத்துக்குப் பக்க வாத்தியமுமாச்சு! ரொம்ப பேஷ்!

மறுநாள் மப்பும் மந்தாரமுமாய் இருந்தது. சாயங்காலத்திலேயே காற்று வேகமாக அடித்துக் கொண்டிருந்தது. பிசுபிசு வென்று பெய்து கொண்டிருந்த மழை கொஞ்ச நேரத்தில் நின்று விட்டது. ஆனால் வானத்தில் கருமேகம் கவிழ்ந்து கொண்டிருந்தது. பத்து மணி வரையிலும் படித்துக் கொண்டிருந்தோம். படுத்துக் கொண்டு தூங்கி அரை மணி நேரம் கூட ஆகவில்லை. காற்று புயலாக மாறி விட்டது. மழையுங் கலந்து கொண்டது. புயல் காற்று வந்து விட்டது.

ஊரெல்லாம் ஒரே ஜலமயம். கன்னிக்கோட்டை ஒடுகள் பறந்தன. வெளியிலும் போக முடியவில்லை. ஒரே சப்தம். எலக்டிரிக் லைட்டுகளும் எரியவில்லை. எப்படி எரியும்?

எனக்குத் தூக்கக் கண்ணாயிருந்தது. கண்ணயர்ந்து விட்டேன். சூரியன் கிளம்பி ஐந்து நிமிஷங்கூட ஆகவில்லை.

"ரமணி! ரமணி!" என்று கதவைத் திறந்து கொண்டே பரபரப்புடன் வந்தான் மூர்த்தி. "என்னடா?" என்று படுக்கையை விட்டெழுந்தேன். அவனால் பேச முடியவில்லை. கண்கள் சுழன்றன. தடாரென்று என் மேல் சாய்ந்து விட்டான்.

வாசலில் பள பளவென்று ஒன்று தெரிந்தது. பாம்புதான். மழைக்காகக் கதவோரம் வந்து படுத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். மூர்த்தியின் வலது காலில் பிடுங்கி விட்டது. எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அதற்குள் அறையில் கூட்டம் கூடி விட்டது. டாக்டருக்கு ஆள் அனுப்பினார்கள். அவர் வந்து சேர்வதற்குள் என் மூர்த்தியின் பூலோக வாழ்க்கை முடிவடைந்து விட்டது. தந்தி சீக்கிரம் கிடைத்து விட்டதால் மூர்த்தியின் பெற்றோர்களும் பன்னிரெண்டு மணிக்கே வந்து விட்டார்கள்.

எந்த வேளையில் என்ன எண்ணத்துடன் அந்தப் பயோவி "நீ மட்டும் சாஸ்வதமா?" என்று கேட்டானே தெரியவில்லை. நான் சாஸ்வதமில்லை யென்று மூர்த்தியே நிரூபித்து விட்டான். அன்று பூராவும் அழுது கொண்டிருந்தேன். அதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்?

மறு நாள் பொழுது விடிந்ததும், அந்த அடுக்கு மல்லிகையாவது சாஸ்வதமா யிருக்கின்றதா என்பதைப் பார்க்கலாம் என்று போனேன். பார்க் பூராவும் ஒரே அலங்கோலம். பெரிய பெரிய மரங்களெல்லாம் முறிந்து பாதைகளை அடைத்துக் கொண்டிருந்தன. பார்க்கில் ஒரு சண்பக மரம் உண்டு. அது வேரோடு சாய்ந்திருந்ததைப் பார்த்ததும் என் வயிறு பகீரென்றது. அந்த அடுக்கு மல்லிகைச் செடி வேரோடு தண்ணீரில் மிதந்து கொண்டிருந்தது. அதிலிருந்த பூக்கள் அழுகிப் போயிருந்தன.

என் அன்புள்ள மூர்த்தியும் சாஸ்வதமில்லை. அடுக்கு மல்லிகையும் சாஸ்வதமில்லை. ஒரே நாளில் இரண்டு சம்பவமும் சேர்ந்தாற்போல் நடந்ததை நினைத்தால் பகீரென்கிறது.

* * *

"அதிலிருந்து இந்த அடுக்கு மல்லிகையைக் கண்டால் அவன் ஞாபகம்தான் வருகின்றது. அதனால்தான் அடுக்கு மல்லிகையை வைத்துக்கொள்ள வேண்டா மென்றேன். வேணுமென்றால் மாலையாகக் கட்டி அவன் இருக்கும் போட்டோவுக்குப் போடு. அதுவே நீ எனக்குச் செய்யும் மரியாதை" என்றேன்.

"உங்கள் இஷ்டம்" என்று கண்ணிலிருந்து வந்த நீர்த்துளிகளை முன்தானையால் துடைத்துக் கொண்டாள் சாரு.

"சாரு! அழாதே! அவன் மாதிரி இனிமேல் யார் சண்பகனுக் கிடைக்கப் போகிறார்கள்?" என்றேன்.

"மணி பத்தடித்து விட்டது. சாப்பிட வாருங்கள்! சமையலெல்லாம் ஆறிப் போயிருக்கும்!" என்றாள் சாரு.

சமையல் ஆறித்தான் இருக்கும். ஆனால் என் மனது ஆறின பாடில்லையே!

## சரக்கின் மேன்மையைக் குறிப்பது

கரும் பூனை மார்க்

AROMATIC CHEMICAL & OIL CO

சோப்பு, வாசனை சாமான்கள், சோடா பானம், பெப்பர்மின்டு தயாரிப்பவர்கள். கரும் பூனை மார்க் பொருள்கள். தங்கள் தயாரிப்புகளுக்கு மிகச் சிறந்தவை என்பதைத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள்.

**AROMATIC CHEMICALS** AMINJIKARAI, MADRAS

---

**உத்திரவாதமுள்ள ஆபரணங்களுக்கும் வைரங்களுக்கும் அசல் வெள்ளி சாமான்களுக்கும்**




## P.A. ராஜு செட்டியார் & பிரதர்

கடை வீதி, "ஸ்வர்ண மாளிகை" கோயமுத்தூர்.

தந்தி. "ராஜா"...... தபால் பெட்டி. 139. ...... போன் 218.A

# பலசரக்கு

லண்டனில் ஒரு புரொபஸர் ஞாபகமறதியாகத் தம்முடைய குடையை ஒரு ஓட்டலில் வைத்து வந்து விட்டார். திரும்பிச் சென்று விசாரித்த போது, யாரோ அந்த ஓட்டலில் வந்து தங்கியுள்ள இளம் காதலர்கள் எடுத்துச் சென்றிருப்பதாகத் தகவல் கிடைத்தது.

உடனே புரொபஸர் அந்தத் தம்பதிகள் தங்கியிருந்த அறைக்கு ஓடினார். அறைக் கதவுகள் உள்பக்கம் தாளிடப்பட்டிருந்தன. பின்வரும் சம்பாஷணை உள்ளே யிருந்து கேட்டது :

காதலி :—இதோ, இந்த நகைகள் அவ்வளவும் யாருக்கு?

காதலன் :—உனக்கேதான் கண்மணி!

காதலி :—ஊரிலுள்ள அந்த பங்களா?

காதலன் :—அதுவும் உன்னுடையதே.

காதலி :—இந்தப் பணம்?

காதலன் :—உன்னுடையதே!

காதலி :—இந்த விலை உயர்ந்த ஆடைகள்?

காதலன் :—சர்வமும் உன்னுடையதேதான்.

புரொபஸர் இந்தச் சமயம் குறுக்கிட்டு, "இதோ பாருங்கள்! நீங்கள் வைத்துக் கொண்டிருக்கிறீர்களே, அந்தக் குடை மட்டும் என்னுடையது!" என்று கத்தினார்.

★

இரண்டு சீன வேதாந்திகள் ஒரு நதிக் கரையில் உட்கார்ந்து பின்வருமாறு சம்பாஷித்துக் கொண்டிருந்தனர்:

ஒருவர் :—ஆஹா! இந்த மீன்கள் ஜலத்தில் எத்தனை சந்தோஷமாய் வாழ்கின்றன!

மற்றவர் :—அது உமக்கு எப்படித் தெரிந்தது? நீர் ஒரு மீனல்லவே?

முதல்வர் :—எனக்குத் தெரியாதென்று உமக்கு எப்படித் தெரிந்தது? நீர் நானல்லவே?



✲

பிரசித்தி பெற்ற ஜால வித்தைக்காரரான டன்னிங்கர் என்பவரை மற்றொரு பிரபல ஜால வித்தைக்காரர் தேடிக்கொண்டு வந்தார். அப்போது டன்னிங்கர் கழுத்தில் கட்டிக் கொள்ளும் 'டை' (Tie) ஒன்றை எங்கேயோ வைத்து விட்டுத் தேடிக் கொண்டிருந்தார். டன்னிங்கர், வந்திருக்கும் நிபுணரின் திறமையைச் சோதிக்கும் பொருட்டு, "என் 'டை' எங்கே இருக்கிறது என்று உம்மால் கூற முடியுமா?" என்று கேட்டார்.



அதற்கு வந்தவர் "அது உம்முடைய டிரங்குப் பெட்டிக்குள் இருக்கிறது" என்று பளிச் சென்று பதில் கூறினார்.

டன்னிங்கர் ஆச்சரியத்துடன் டிரங்குப் பெட்டியைத் திறந்து பார்க்க அதில் ஒரு கறுப்பு நிற 'டை' இருந்தது.

டன்னிங்கர் வந்தவரை மேலும் பரிசோதிக்க எண்ணி, "வெள்ளை நிற 'டை' எங்கிருக்கிறதென்றல்லவா கேட்டேன்?" என்றார். வந்தவர் அதற்கும் சளைக்கவில்லை.

"நீர் ஒரு பெரிய மாஜிக் நிபுணர் என்பது உலகப் பிரசித்தியாக இருக்கிறதே. அது உண்மையானால், அந்தக் கறுப்பு நிற 'டை'யை வெள்ளை நிறமாக மாற்றி விடுங்களேன்" என்றார் வந்தவர்.

★

ஒரு பிரபல ரஷ்ய ஸினிமா நடிகை வெளி தேசம் போயிருந்தாள். ஓரிடத்தில் ஒரு முக்கிய விருந்து நடந்த சமயம் மேற்படி நடிகையை ஏதாவது ஒரு பாட்டுப் பாடச் சொன்னார்கள். அங்கிருந்த ஒருவருக்காவது ரஷ்ய பாஷை தெரியாது.

விருந்துக்கு வந்திருந்த அனைவரும் அவள் வாயசைக்கும் போதும் தலையை ஆட்டும் போதும் பிரமாத உற்சாகத்துடன் கரம் கொட்டிச் சிரமசைத்து ஆஹாகாரம் செய்தனர். எல்லாம் முடிந்ததும் ஒருவர் நடிகையிடம் வந்து, "தாங்கள் என்ன பாட்டுப் பாடினீர்கள்?" என்று கேட்டார்.

"நான் பாடவில்லையே; எங்கள் ரஷ்ய பாஷையில் ஒன்று முதல் 250 வரை எண்ணிக்கொண்டல்லவா இருந்தேன்" என்றாள்.

# இந்தப் பழம் புளிக்காது



~ராஜு

"என்னடி! எப்பொழுது பார்த்தாலும் முகத்தை 'உர்'ன்னு குரங்கு மாதிரி வைத்துக் கொண்டிருக்கிறாயே, ஒரு நல்ல வார்த்தை பேசமாட்டாயா?" என்று தன் மனைவியைப் பார்த்துச் சொல்லிக்கொண்டே உள்ளே நுழைந்தார் நரியார்.

"போதும், நிறுத்துங்கோ! நான் குரங்காட்டமா இருந்தா, நீங்க யாரு? குரங்குக்கு ஆம்படையான் தானே? வெட்கமாயில்லையோ, இப்படிச் சொல்லுகிறதற்கு? நரியாய்ப் பிறந்து விட்டு இப்படி மண்டுவாக எனக்கு ஓர் ஆம்படையான் கிடைக்கணுமா?"

"என்னடி, ரொம்பக் கோபித்துக் கொள்கிறாயே? நான் யார் என்று நினைத்துக் கொண்டாய்?"

"தெரியுமே! சீ, சீ! இந்தப் பழம் புளிக்கும் என்று சொல்லிக்கொண்டே ஓடின அந்தச் சாமர்த்தியசாலியின் பேரன் தானே நீங்கள்?"

"ஓஹோ! இப்போது தெரிந்து கொண்டேன். என் மேலே ஏன் கோபித்துக் கொண்டிருக்கிறாய் என்று. நரியம்மா, இங்கே வா! உனக்கு அந்தத் திராட்சைப் பழங்கள் தானே வேண்டும்? அடி அசடே! இதோ பார், என் சாமர்த்தியத்தை!"

இவ்வாறு மனைவியிடம் வீரம் பேசி விட்டு நரியார் திராட்சைப்பழத் தோட்டத்தை நோக்கிச் சென்றார். ஆனால் அவர் ஆனமட்டும் எட்டிப் பார்த்தார். பழம் கிட்டவில்லை. பழம் இல்லாமலும் வீட்டிற்குப் போக இஷ்டமில்லை. சுற்றுமுற்றும் பார்த்தார். மூலையில் ஒரு பூனையார், மூஞ்சியைக் கடுவன்பூனை மாதிரி வைத்துக்கொண்டு படுத்திருந்தார். அவரைப் பார்த்த நரியார் அவரிடம் சென்றார்.

"என்ன பூனையாரே, ஒருமாதிரியாகப் படுத்துக் கொண்டிருக்கிறீர்கள்?"

"என்ன?" என்று 'சள்' என்று விழுந்தார் பூனையார்.

"அட, ரொம்பக் கோவிச்சுக்காதீங்கோ! உங்க கையிலே சிவப்பாக இருக்கிறதே. இரத்தமா?"

"அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கறீர்? சொன்னால் வெட்கக்கேடு!"

"என்ன, சொல்லுமே! நான் கேட்கக்கூடாதா?"

"அதை ஏன் கேட்கிறீர்? கொஞ்சம் கண்ணயர்ந்தேன். ஒரு போக்கிரி எலி என் கையைக் கடித்து விட்டு ஓடி விட்டது. அது எங்கே என்று பார்த்துக் கொண்டிருக்கிறேன். அதை உண்டு இல்லை என்று பார்த்து விட வேண்டும்."

"அட பைத்தியமே! என்னிடம் சொல்லக் கூடாதா? அந்த எலியை இப்போதானே பார்த்



படத்தில் இருப்பது அசல் கடிகாரம் அல்ல; கடிகாரத்தின் நிழல் எதிரே சுவரில் உள்ள கண்ணாடியில் விழுந்திருக்கும் தோற்றம்தான் இது. இதிலிருந்து, கடிகாரத்தில் மணி எவ்வளவு என்று சொல்ல முடியுமா?



தேன்? அதுவும் என்னிடம் உம்மைக் கடித்த விஷயத்தைச் சொல்லிச் சிரித்தது. இன்னும் ஒரு சமாசாரமும் சொல்லிற்று."

"என்ன சொல்லிற்று அந்த எலி?"

"அதை ஏன் கேட்கிறீர்? ஐயோ அந்த ரகசியத்தை உம்மிடம் சொல்லக் கூடாது."

"இல்லை. நீர் அவசியம் சொல்ல வேண்டும்."

"கேளும். அந்த எலி அந்தத் திராட்சைக் கொடி மேலே போய் ஒளிந்து கொண்டிருக்கிறது. அதைப் பார்த்ததைப் பற்றி உம்மிடம் சொல்ல வேண்டாம் என்றது."

"என்ன நரியாரே, அப்படியா?" என்று சொல்லிக்கொண்டே ஒரே தாவில் அத் திராக்ஷைக் கொடிமேல் பூனையார் பாயவே, அந்தக் கொடியில் இருந்த பழுத்த பழங்கள் எல்லாம் கீழே உதிர்ந்தன.

"எலி இங்கே ஒளிந்து கொண்டிருப்பதாகச் சொன்னீரே. அதைக் காணோமே?" என்றது பூனை.

"ஒவ்வொரு குலையாகத் தேடும். கட்டாயம் அகப்பட்டுக் கொள்ளும்!" என்றது நரி.

பூனையார் இவ்வாறு ஒவ்வொரு குலையாகத் தேடும் பொழுதெல்லாம், பழங்கள் உதிரவே எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு நரியார் வீட்டிற்கு ஓட்டமாக ஓடி வந்தார். கதவைப் பலமாக இடித்தார். "அடியே, பாரடி!" என்று மடியிலிருந்த பழங்களைக் கொட்டினார். "இப்போது என்ன சொல்றே?" என்று இறுமாப்புடன் கேட்டது நரி.

"ஆமாம்; இவ்வளவு பழம் உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?" என்று ஆச்சரியத்துடன் கேட்டது அதன் மனைவி.

நரி நடந்த விஷயத்தைச் சொல்லவே, பெண் நரிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. "என்ன சமர்த்து! என்ன சமர்த்து!" என்று புகழ்ந்து விட்டு, "இந்தாருங்கள்!" என்று பெண் நரி ஒரு பழத்தை எடுத்து நரியாரிடம் கொடுத்தது.

"இவ்வளவுதானா எனக்கு?" என்றது நரியார்.

"ஆமாம்; இந்தப் பழம் புளிக்கவில்லை. தித்திக்கிறது. ஆகையால் எல்லாம் எனக்குத்தான்" என்றது.

ஆனால் பூனையோ மரத்துக்கு மரம் தாவிக் கொண்டு எலியைத் தேடிக் கொண்டே இருந்தது. அதற்கு அந்த எலி அகப்பட்டதோ என்னமோ, நமக்குத் தெரியாது.



இது என்ன வேடிக்கை? — ஒன்றுமில்லை; சினிமாவில் 'நாரதர்' வேஷம் போட்டுக் கொள்ளப் போகிறவர் தாடியைக் கட்டிக் கொள்ளுமுன் க்ஷவரம் செய்து கொள்கிறார்!



# பாய்ந்தது புலி



வஸந்தன்

வெள்ளிப்பட்டி ஜமீன்தார் வணங்காமுடி மன்னன் ராஜா சங்கதுரை சாகேப் பகதூருக்கு உயிருக்கே ஆபத்தான புலிவேட்டையில்தான் உயிர். இதற்காகவே அவர் காடு காடாக யாத்திரை செய்தார். "வேண்டாமடா! நல்ல பிள்ளையாய் லட்சணமாய் வீட்டிலேயே இரு" என்று அவர் தாயார் எவ்வளவு சொல்லியும் அவர் கேட்கவில்லை. அதுவும், பிள்ளையாண்டான் சுட்ட புலிகளைக் கொண்டு வந்து, அதற்குள் வைக்கோலை அடைத்து அரண்மனையில் அங்கங்கே வைத்திருப்பது அந்த அம்மாளுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை.

"அப்பா! செத்துப் போன புலிகளைக் கொண்டு வந்து யாராவது வீட்டில் வைத்ததாகக் கேட்டிருக்கிறாயா? அல்லது படித்திருக்கிறாயா?" என்றாள் தாயார்.

"அம்மா! புலி என்று கதையில் வந்தால்கூட அந்தக் கதையைப் படிப்பதற்குப் பயப்படுகிறார்கள். அப்படியிருக்கும்போது யார் நிஜப் புலியைக் கொண்டுவந்து வீட்டில் வளர்ப்பார்கள்?" என்றார் ஜமீன்தார்.

"அழகாயிருக்கிறது பேசுகிற லட்சணம்!" என்றாள் தாயார்.

சங்கதுரை கொன்ற புலிகள் அறைக்கு ஒன்று இரண்டு இருந்தன. அவை பார்ப்பதற்கு நிஜப் புலிகள் மாதிரியே இருக்கும். அரண்மனைக்கு வருகிறவர்கள் அவற்றைப் பார்த்து விட்டுக் கூச்சல் போட்டு மயங்கி விழுவதும், பிறகு அவர்களை மூர்ச்சை தெளிவிப்பதும் வழக்கமாயிருந்தது.

ஒரு நாள் ஜமீன்தாரின் வேலைக்காரன் ஒருவன் வழக்கம்போல் புலிப் பொம்மைகளைத் துடைத்து வைப்பதற்காக ஹாலுக்குள் வந்தான். அப்பொழுது 'உர்'ரென்று அருகில் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தானோ இல்லையோ, அவன் உடம்பு இரண்டு முழம் தூக்கி வாரிப்போட்டது. ஏனெனில், அவனுக்கு எதிரில் புலி ஒன்று நடந்து வந்து கொண்டிருந்தது. ஐயோ, இதென்ன, புலிப் பொம்மைக்கு எப்படி உயிர் வந்தது? 'ஐயோ, புலி!' என்று தன்னை யறியாமல் கூச்சல் போட்டுக் கொண்டே வெளியே ஓடிவந்து கதவைத் தாழ்ப்பாள் போட்டான். ஆனால் இந்த மாதிரிக் கூச்சலைக் கேட்டுத்தான் வீட்டில் இருப்பவர்களுக்குச் சகஜமாயிற்றே! யாரும் அந்த வேலைக்காரன் போட்ட கூச்சலைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை.

ஆனால் சில நிமிஷங்களில் வேறொரு சத்தத்தைக் கேட்டு எல்லாரும் ஹாலைப் பார்க்க ஓட்டமாக ஓடி வரும்படியாகி விட்டது. அதுதான் புலியின் உறுமல் சத்தம். எல்லாரும் ஓடிவந்து ஜன்னல் வழியாக நிஜப்புலி ஒன்று உறுமிக்கொண்டு அங்குமிங்கும் உலாவுவதைப் பார்த்துத் திடுக்கிட்டுப் போனார்கள். வாஸ்தவமாகவே புலிப் பொம்மைக்கு உயிர் வந்து விட்டதா? யோசித்துப் பார்த்ததும், இத்தனை நாளாய் எஜமான் குண்டுக்கு அகப்படாமல் பக்கத்துக் காட்டில் தலைமறைவாயிருந்து வந்த புலிதான் அங்கே வந்திருக்கிறதென்று தெரிந்தது.

இதற்குள் அந்தப் புலி திறந்திருந்த இடைக்கட்டுக் கதவின் வழியாகப் பக்கத்திலிருந்த அறை ஒன்றுக்குள் போய்விட்டது! அந்த அறையில் ஜமீன்தார் ஏதோ புத்தகம் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தார். புலியின் உறுமலையும் வேலைக்காரர்களின் கூக்குரல்களையும் பொருட்படுத்தாமல் கல்லுப் பிள்ளையாரைப்போல் ஜமீன்தார் உட்கார்ந்திருந்தார்.

"எஜமான்! எஜமான்!" என்று கூச்சலிட்டுக் கூப்பிட்டார்கள் வேலைக்காரர்கள். ஆனால் அதற்குள் புலி ஜமீன்தார் மேல் பாய்ந்து விட்டது. ஆனால் ஜமீன்தார் கொஞ்சம்கூட அதைச் சட்டை செய்யவில்லை. துளிக்கூட அசையவில்லை. பாய்ந்த புலி ஜமீன்தார்மீது மோதுண்டு கீழே விழுந்தது. அப்பொழுது அதன் தலையில் பலமான காயம் பட்டு இரத்தம் பெருகி யோடிற்று. "பேஷ்! ரொம்ப நன்றாய்ச் செய்திருக்கிறான்! குப்புசாமியின் குமாரன் அப்பாசாமி செய்த சிலை என்றால் அழுத்தத்துக்கும் உறுதிக்கும் கேட்கவா வேண்டும்? நான்தான் புலிகளுக்கு எமனாக இருக்கிறேன் என்றால் என் சிலைகூட அப்படித்தான் இருக்கிறது" என்று பின்னால் நின்றுகொண்டிருந்த ஜமீன்தார் கூறியபடி ஒரு வேட்டைத் தீர்த்தார். இதையெல்லாம் பார்த்த வேலைக்காரர்களும் கற்சிலைகளாய் நின்றார்கள்.




யுத்தகாலத்தின் கட்டுப்பாடுபண்ண ரெயில் போக்குவரத்தில் பிரயாணம் ஆனந்தத்தி லிருந்து கடினமான செயலாக மாறிவிடுகிறது. யுத்தத்திற்கு முன் இருந்ததைவிட சத்தமும் அதிகம். புக்கிங் ஆபீஸ்கள், பிளாட்பாரங்கள் முக்கியமாக ரெயில்வண்டிகளும் அதிக ஜன நெருக்கமுள்ளதாயும் அசௌகரியமாகவும் இருக் கிறது. பிரயாண சமயம் ஆகாராதிகள் கிடைப் பது கஷ்டம். உண்மையில் அவசியம் இருந்தா லொழிய பிரயாணம் செய்வது மதியீனமே.

ஆனாலும் அவசியம் பிரயாணம் செய்யவேண்டிய வர்கள் எல்லா ஸ்டேஷன்களிலும் ஒரு விரும் பத்தக்க காட்சியை காண்கிறார்கள். அதுதான் டீ விற்பவன். வெயில் காலத்தில் குளிர்ச்சியையும், குளிர் காலத்தில் உஷ்ணத்தையும் கொடுக்கும் டீ எப்பொழுதும் கிடைக்கிறது. அது அதிக செலவற்றது. ரெயிலில் போகும்போது அல்லது எந்த இடத்திலும் நீங்கள் அசௌகர்யப்பட்டு சோர்வடைந்தோ அல்லது கவலையுடன் இருந்தாலும் டீ உங்களை கிளர்த்தி உற்சாக மூட்டுவதை காண்பீர்கள்.





# இந்தியத் தேயிலையில்

## மிகச்சிறந்தது

மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள




லிப்டன்ஸ் வெள்ளை லேபில் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.

# லிப்டன்ஸ்

## வெள்ளை லேபில்

நேர்த்தியான இந்திய தேயிலை

LTK 84 W

# காலக்ஷேபம்

### முடியாத காரியம்

கிழிந்த கோட்டு அணிந்து கொண்டிருந்த ஒருவர் தையற்காரனைப் பார்த்து, ‘‘ இந்த மாதிரி கோட்டு ஒன்று தைத்துக் கொடுப்பாயா, அப்பா ?’’ என்று கேட்டார்.

தையல்காரன் :—நான் நல்ல கோட்டாகத் தைத்துக் கொடுத்து விடுகிறேன். நீங்கள் தான் அதுமாதிரி செய்து கொள்ள வேண்டும் !

—எஸ். எஸ். ராஜன்.

★

### மருந்து வேண்டாம்

‘‘ நான் எழுதிய கதைகள் புத்தகமாக வந்திருக்கிறதே, பார்த்தீர்களா ? எப்படியிருக்கிறது ?’’

‘‘ ரொம்ப அருமையான புத்தகம். தூக்கம் இல்லாமல் அவதிப்படும் என் மனைவிகூடத் தூக்க மருந்தை நிறுத்திவிட்டாள் !’’

—சிவசாமு.

★

### என்ன சொல்வார் ?

ராமு :—நீ உன் வீட்டுக்குத் தெரியாமல் சினிமாவுக்கு வந்திருக்கிறாயே, உன் தகப்பனார் உன்னை இங்கு பார்த்துவிட்டால் என்ன சொல்லுவார் ?

கோபு :—‘ நான் சினிமாவுக்கு வந்தேனென்று அம்மாவிடம் சொல்லாதேடா !’ என்பார் !

—‘‘ கலா ’’

★

### வரும்படியில் கண்

அம்பிப் பயலுக்கு அவன் தகப்பனார் ஒரு பொம்மை வீடு வாங்கிக் கொடுத்துவிட்டு ஊருக்குப் போனார்.

தகப்பனார் (ஊரிலிருந்து திரும்பி வந்தவுடன்) :—அம்பி ! அந்தப் பொம்மை வீடு எப்படி இருந்தது ?

அம்பி :—நன்றாயிருந்தது, அப்பா !

தகப்பனார் :—அந்த வீடு இப்பொழுது எங்கே ?

அம்பி :—அதை அடுத்தாத்துத் தம்பிப் பயலுக்கு வாடகைக்கு விட்டிருக்கிறேன்.

—ஜி. சுவாமிநாதன்.

### அதிர்ஷ்டசாலிகள் !

புருஷன் (சென்னைவாசி):—அடியே ! கேட்டாயா சேதியை! பம்பாயில் துணிக் கடைகளில் குடும்பத் தலைவருடைய ரேஷன் கார்டைக் கொண்டுபோய் நீட்டினால் ஆறு மாதத்திற்கு ஒரு தடவை ஒரு ஜோடி வேஷ்டியும், ஒரு ஜோடி புடவையும் கொடுக்கிறார்களாம். பத்திரிகையில் போட்டிருக்கிறது.

மனைவி :—நான் தான் சொல்றேனே, என்ன இருந்தாலும் பம்பாயில் உள்ளவர்கள் அதிர்ஷ்டசாலிகள் தான்னு ! இந்தத் தரித்திரம் பிடித்த ஊரில்தான் எதுக்கெடுத்தாலும் ரூபாயை நீட்ட வேண்டியிருக்கு !

—ஜி. என். சரஸ்வதி.

★

### புத்திமதி

மாஜிஸ்ட்ரேட் :—நீ குடித்து விட்டுத் தெருவில் கூச்சலிட்டுக் கொண்டிருந்ததற்காக, ஐந்து ரூபாய் அபராதம் விதிக்கிறேன். அபராதம் செலுத்தாவிட்டால் ஒரு வாரம் சிறைத் தண்டனை.

கைதி :—என்னிடம் ஐந்து ரூபாய் இல்லையே, எஜமானே !

மாஜிஸ்ட்ரேட் :— அப்படியானால் நீ சிறைக்குத்தான் போகவேண்டும். குடியில் பணத்தைச் செலவழிக்காதிருந்தால் இப்போது அபராதம் செலுத்தியிருக்கலாமல்லவா ?

—எ. லக்ஷ்மி.

★

### நல்ல யோசனை

கணவன் (வெளியில் சென்று திரும்பி வந்து):—அடியே ! தோசை ஆகிவிட்டதா?



மனைவி :—உங்கள் தலையைப் பார்த்துக் கல்லைப் போடலாமென்றிருந்தேன். இதோ ஆகிவிட்டது.

—பார்வதி சுந்தரம்.

# "கலெக்டர்! கலெக்டர்!"

## சுவாமி சுத்தானந்த பாரதி

**பா**ரதியார் சர்க்கார் உத்தரவில்லாமல் பேசக்கூடாது. அரசியல் மூச்சு விடக்கூடாது. வேறிடம் சென்றாலும் உத்தரவு வேண்டும். பாரதியார் ஆற்றங்கரையில் சூரியாஸ்தமனத்தைப் பார்த்துக்கொண்டே நின்றார். சிஷ்யர் பயபக்தியுடன் அருகே நின்றார். திடீரென்று "கிடக்கிறது நோபல் பரிசு, நமக்கு வேறொரு யோசனை தோன்றி விட்டது" என்று துள்ளிக் குதித்தார்.

சீடர்:—என்ன யோசனை?

பாரதி:—நாம் விவேகானந்தர்போல் பிரசங்கம் செய்யப் போகிறோம்.

சீடர்:—நடக்கிற காரியமாகப் பேசுமே!

பாரதி:—ஓய் ஓய், நமக்கு நடக்காத காரியம் உண்டா? நெஞ்சு உரமில்லாத கோழை போலப் பேசாதேயும். உடனே நாம் சொன்னபடி செய்யும்.

சீடர்:—உத்தரவாகட்டும்.

பாரதி:—அப்படிச் சொல் பாண்டியா......! சபாஷ்! நாம் திருநெல்வேலியில் சர்வமதப் பிரசங்கங்கள் செய்யப் போகிறோம். ஒரு வாரம் ஊர் கோலாகலமா யிருக்கப் போகிறது. அதற்கு நோட்டீஸ் அச்சிட உடனே கிளம்பும்.

சீடர்:—என்னவென்று அச்சிடுவது?

பாரதி:— எதற்கெடுத்தாலும் கேள்வி தானா? 'தமிழ்நாட்டுக் கவி பாரதி திருநெல்வேலியில் பெரிய சபை கூட்டி, உண்மையான வேத தர்மம், இஸ்லாம், கிறிஸ்தவம், பௌத்தம் முதலிய சகல மதங்களையும் பற்றி ரஸமாகப் பேசுவார். கட்டணம் பத்து ரூபாய் முதல் ஒரு ரூபாய் வரையில். பெருவாரியாக மகாஜனங்கள் வந்து கேட்க வேண்டும். அரிய சந்தர்ப்பம்!' என்று பதினாயிரம் நோட்டீஸ் அச்சிட்டு, பாண்டு வாத்யத்துடன் ஊரெல்லாம் பட்டுவாடா செய்யும். இந்த ஊரில் ஒரு லக்ஷ ரூபாய் சேரும். பிறகு மதுரை, திருச்சி, சேலம், கோவை, காஞ்சி, சென்னை என்று புறப்பட்டுப் போவோம். ஏராளமான பணம் சேர்த்து விடுவோம். அப்புறம் நாம் ராஜா!

சீடர்:—அது சரி. ஆனால் தாங்கள் பேசக் கலெக்டர் உத்தரவு வேண்டுமே!

பாரதி:—அட இழவே! அது ஒன்றிருக்கிறதா? வாரும்.

பாரதியார் ஒரே ஓட்டமாகக் கலெக்டர் பங்களாவுக்குச் சென்றார். தார்வான் முஸல்மான். அவனுடன் இந்துஸ்தானியில் பேசி ஒரு சீட்டனுப்பினார். தார்வான் வந்து, பாரதியை அழைத்துச் சென்றான். பாரதி, "நாம் சமயப் பிரசங்கம் செய்ய வேண்டும். அனுமதி தாரும்" என்றார். "நாளை யோசித்துச் சொல்லுகிறேன்" என்றார் கலெக்டர்.

"சை, சை! அபசகுனப் பிரகிருதிகள்" என்று அலுத்துக்கொண்டு பாரதியார் மறுநாள் கலெக்டர் பங்களாவுக்குப் போனார்.

தார்வான்:—ஜானா நை சல்து. பாஹர் ஜாவ். (அப்படிப் போகக்கூடாது; போம் வெளியே.)

பாரதி:—கபோ. ஹம் சலேங்கே ஊபர்! (கிட, நாம் மேலே செல்வோம்.)

தார்வான்:—ஆஜ் முலாகாத் நை மிலேகா! (இன்று சந்திக்க முடியாது.)

பாரதி:—ஆப் ஸர்க்கார் நை. கபோ பீசே. (நீ சர்க்காரில்லை, கிட பின்னே.)

தார்வான் பாரதியாரைப் பிடித்து நிறுத்தினான். பாரதியார் திமிறிக் கொண்டு "கலெக்டர்! கலெக்டர்!" என்று பெரிய சத்தமிட்டுக் கொண்டே மளமள வென்று படியேறிச் சென்றார். கலெக்டர் சத்தம் கேட்டு வந்தார்.

பாரதி:—இன்று பிரசங்கம் ஆரம்பிக்கப் போகிறேன்.

கலெக்டர்:—கூடாது. இன்னும் ஒரு வாரம் கழித்துச் சொல்லுகிறேன்.

பாரதியார் ஒரு வீரப் பார்வை பார்த்துக் கொண்டே கீழே வந்து, "இந்த இழவு உத்தரவும் கட்டுப்பாடும் இருக்குமட்டும் மனித ஜாதி உருப்படாது! கட்டென்பதனை வெட்டென்போம்!" என்று பேசிக் கொண்டே நண்பர் ஆவுடையப்பர் வீட்டில் நுழைந்தார். அங்கே பலமான உபசாரம் நடந்தது. நிலாவில் ஆனந்தமாகப் பாடி விட்டுப் படுத்தவர் மறுநாட் காலை எழுந்தார். பிறகு அவரும் கலெக்டரைப் பார்க்கவில்லை; கலெக்டரும் உத்தரவு தரவில்லை.

*சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குரிய பரிசு பெற்றவர்: வி. ஆர். ராஜாராம், 8. W/48. முனியப்பன் கோவில் தெரு, செவ்வாய்பேட்டை, சேலம்.*

# ஊமைச்சி



ஆ. ராஜகோபால்

"இந்தா! எழுந்திருக்க மாட்டே?" என்று நான் அதட்டியதைக் கண்டதும் ஊமைச்சி பயந்தே போய்விட்டாள். என்றுமில்லாத கோபம் என் குரலிலே தொனித்தது. அவளுடைய அந்தப் பரிதாபகரமான தோற்றம் என் மனதிலே சுருக்கென்று பட்டது. "பாவம்! ஊமைப் பெண்ணை ஏன் இப்படிக் கடிந்துகொள்ள வேண்டும்?" என்று தோன்றியது.

· · ·

ஊமைச்சிக்கு வயது எழெட்டுதான் இருக்கும். வீட்டு வேலைக்காரன் சின்னையனுடைய ஒரே பெண்; தாயற்றவள். 'ஊமைச்சி' என்று எப்படியோ பெயர் வந்து விட்டது. நன்றாய்ப் பேசக் கூடியவள்தான்.

என் தங்கை சாரு படிக்க உட்காரும் பொழுது ஊமைச்சியும் வந்து உட்கார்ந்து விடுவாள். எனக்கு மகா கோபம் வரும். எழுந்து செல்லும்படி அதட்டுவேன். முதலில் இரண்டு மூன்று நாட்கள் என் அதட்டலுக்குப் பயந்து எங்களை விட்டுக் கொஞ்ச தூரத்தில் போய் உட்கார்ந்தாலும் எங்களையே கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருப்பாள். அவளுடைய ஆர்வத்தைக் காண எனக்கு மிகவும் ஆச்சரியமாயிருந்தது. சரி, போனால் போகட்டுமென்று என்னுடைய அதட்டலைச் சிறிது தளர்த்தினேன். அவ்வளவுதான்; மெதுவாக அவள் தான் உட்காரும் இடத்திற்கும் நாங்கள் உட்காரும் இடத்திற்குமுள்ள இடைவெளியைக் குறைத்துக்கொண்டே வந்து கடைசியில் சாருவின் பக்கத்திலேயே உட்கார்ந்து விட்டாள்.

ஊமைச்சியின் தொந்தரவு பொறுக்கமாட்டாமல் சின்னையன் அவளுக்கு ஒரு சிலேட்டும், புஸ்தகமும் வாங்கிக் கொடுத்து விட்டான். அவ்வளவுதான்; அவள் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை. தினம் தவறாமல் பாடம் படிக்கவும் எழுதவும் ஆரம்பித்து விட்டாள். அவளுடைய ஆர்வத்தைக் கண்டு ஒருவிதத்தில் மகிழ்ச்சியே யுண்டாயிற்று. அது என் அருவருப்பை அடக்கி அவளுக்கும் பாடம் சொல்லிக் கொடுக்கும்படி தூண்டியது. ஆகவே சாருவுடன் அவளும் ஒழுங்காகப் படித்துவர ஆரம்பித்தாள்.

அன்று நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியாமல் சாரு விழித்துக் கொண்டிருந்தபோது, ஊமைச்சி ரொம்பத் துடியாகப் பதில் கூறிவிட்டுக் கர்வத்துடன் சாருவைப் பார்த்தது எனக்கு என்னவோ போலிருந்தது. சாருவின் தோல்வியும், ஊமைச்சியின் கர்வம் நிறைந்த அந்த வெற்றியும் என்னுடைய கௌரவத்திற்கும், அந்தஸ்திற்கும் பெரிய அவமானமாகத் தோன்றியது. "இந்தா! எழுந்திருக்கமாட்டே?" என்று கர்ஜித்தேன். அவள் அப்படியே நடுங்கி விட்டாள்.

புத்தி என்பது பணக்காரர்களுக்கு மட்டும் கொடுக்கப்பெற்ற ஏகபோக உரிமை அல்ல என்பதை அறிந்துகொள்ள எனக்கு வெகுநாள் பிடிக்கவில்லை. இருந்தாலும் வேலைக்காரனுடைய பெண் இத்தனை புத்தி கூர்மையுள்ளவளா யிருப்பது என் மனதில் ஒரு விதமான அருவருப்பையே உண்டாக்கியது.

2

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு நாலைந்து நாட்களாக ஊமைச்சியை வீட்டிலே காண முடியவில்லை. என் மனமும் சரியாயில்லை. நிதானமாக யோசித்துப் பார்த்ததில் குற்றம் என்மேல்தான் இருப்பதாகத் தெரிந்தது. நியாயமாக விடை சொல்லத் தெரியாத சாருவைக் கோபிக்க வேண்டியிருக்க, பதில்சொன்ன ஊமைச்சியைக் கோபித்தது பிசகென்றே பட்டது.

சாருவுக்கும் பொழுது போகவில்லை. ஊமைச்சி இல்லாமல் அவளுக்கு விளையாடக் கூடப் பிடிக்கவில்லை. அவள் ஊமைச்சியை அழைத்து வரும்படி சின்னையனை நச்சரிக்க ஆரம்பித்து விட்டாள். கடைசியாக ஊமைச்சியும் பழையபடி வீட்டிற்கு வரப் போக ஆரம்பித்து விட்டாள்.

நாட்கள் சென்றன. வருஷம் ஒன்றாகி விட்டது. சாருவும் அநேக புத்தகங்களைப் படித்து விட்டாள். கணக்கு, பூகோளம், சரித்திரம் என்று பல விஷயங்களைப் படித்தறிந்தாள். சாருவுடனேயே ஊமைச்சியும் மேற்கூறிய எல்லாவற்றையும் படித்தாள்.

கடைசியாக நான் கிராமத்தை விட்டுச் செல்ல வேண்டியவனானேன். வெகு நாட்களாக வேட்டையாடி வந்த வேலை கிட்டி விட்டது. கலெக்டர் ஆபீஸ் குமாஸ்தாவாக நியமிக்கப்பட்டுச் சேலத்திற்குச் சென்று விட்டேன். போகும் பொழுது புஸ்தக அலமாரியைப் புரட்டிக் கொண்டிருந்தேன். பாரதியாரின் பாடல் புத்தகம் கண்ணில் தென்பட்டது. சட்டென்று ஒரு யோசனை தோன்றியது. அந்தப் புத்தகத்தின்மேல் "ஊமைச்சிக்கு அன்பளிப்பு" என்று எழுதிக் கையெழுத்திட்டேன். அதை ஊமைச்சியின் கைகளில் கொடுத்தபோது அவள் கண்களிலிருந்து தோன்றிய திரண்டு சூடான கண்ணீர்த் துளிகள் என் விரல்களின் மீது விழுந்தன.

நேற்றுப் போலிருக்கிறது. ஆனால் பத்து வருஷங்கள் ஓடி மறைந்துவிட்டன. நான் கிராமத்துக்குத் திரும்பிப்போகவே யில்லை. கடைசியாக அந்த வருஷம் கிராமத்துக்குப் போனேன்.

கிராமம் பழையபடிதான் இருந்தது. ஏதோ சிலர் வேலையை நாடிப் பட்டணத்திற்குச் சென்று விட்டனர். சிலர் வந்த வேலையை முடித்துக் கொண்டு வானுலகம் சென்று விட்டனர். அவர்களிலே சின்னையனும் ஒருவன் என்று அறிந்தபோது என் மனம் மிகவும் வருந்தியது. ஊமைச்சியைப் பற்றி அறிய என் உள்ளம் விரும்பியது.

மத்தியானம் சாப்பாட்டின்போது அம்மாவே ஆரம்பித்து விட்டாள். "நம் சின்னையன் இருந்தானே! அவன் பெண்... பாவம்......" என்று அவள் ஆரம்பித்ததும் என் மனம் திக்கென்றது.

"ஆமாம், அவளுக்கு என்ன?" என்றேன் பரபரப்போடு.

"இல்லை, அவளுக்கு ஒன்றுமில்லை. சின்னையன் இருந்தவரை ஒழுங்காயிருந்த அவளுடைய மாப்பிள்ளை — அதுதான் ஊமைச்சியின் கணவன், அவன் போன பிறகு குடிகாரனாக மாறி விட்டானாம். அவளை அடித்துத் துன்புறுத்தாத நாளே இல்லையாம், பாவம்! ரொம்ப நல்ல பெண்" என்று அநுதாபத்துடன் முடித்தாள் தாயார்.

அவளை ஒரு தடவை பார்த்து விட்டு வர வேண்டுமென்ற விருப்பம் உண்டாயிற்று. ஆயினும் வெட்கம் அதை மேலோங்க விடாமல் அடித்துவிட்டது. நம்முடைய அந்தஸ்தென்ன? அவளுடைய அந்தஸ்தென்ன? அப்படியிருக்கும்போது நாம் எப்படி அவளைப் போய்ப் பார்ப்பது?

3

ஆத்தூர் வட்டாரம் பூராவும் என்னுடைய ஆளுகையின் கீழ் வந்தது. அதாவது அந்தப் பகுதிக்கு நான் தாசில்தாராக நியமிக்கப்பட்டேன். அத்தனூர்ப்பட்டியில் ஜமாபந்தி. அக்கம் பக்கத்திலுள்ள அந்தந்த கிராமத்துக் கணக்குகளும் பரிசீலனை செய்யப்பட வேண்டியவை. ஆகவே பத்துப் பதினைந்து நாட்கள் அவ்விடம் 'காம்ப்' போட உத்தேசித்தேன். அன்று காலை சற்றுக் குளிராக இருந்தது. வெளியில் ஈஸி சேரைப் போட்டுக்கொண்டு சூரிய வெளிச்சத்தில் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தேன். என் கவனமெல்லாம் பத்திரிகை மீதிருந்தாலும் காதுகள் அக்கம் பக்கத்தில் நடக்கும் விஷயங்களிலும் கவனம் செலுத்தி வந்தன.

"எம் புள்ளே! வெறகு என்ன விலைன்னு போடறே?"—இது சமையற்கார சாம்புவின் குரல்.

"நாலு பணம், சாமி!"—இந்தக் குரல் ஒரு பெண்ணினுடையது.

"ஒன்னையும் சேத்தா?" என்றான் சாம்பு ஹாஸ்யமாக.

"ஏ! வெறகு விக்கிற வேலையிலே எட்டணாவுக்குப் போட்டா வலிக்குதோ? வாணான்னா போ, சாமி!"

"சரி, மூணு பணம் வச்சுக்கோ."

பேரம் முடிந்துவிட்டது. அவள் விறகை முற்றத்தில் போட்டுவிட்டு வெளியே வந்தாள். அதற்குள் சாம்பு அவளுக்கு நாணா கொடுக்க வேண்டுமென்றும், தன்னிடம் சில்லறையில்லை யென்றும் கூறினான். நான் சில்லறை யெடுத்து வருவதற்காக எழுந்தேன். அனாயாசமாகப் பத்திரிகையிலிருந்து

தலையை மேலெடுத்தவன், விறகுக்காரி என்னையே கூர்ந்து கவனிப்பதைக் கண்டேன். நான் சட்டென்று உள்ளே போய்ப் பணத்தை எடுத்துக் கொண்டு வெளியே வந்து பார்த்தேன். அவளைக் காணோம். அவள் என் பணம் பெற்றுக் கொள்ளாமல் போய்விட்டாளென்று சாம்புவைக் கேட்டதற்கு, அவன், "ஒரு வேளை எஜமானை இன்னாரென்று தெரிந்துகொண்டு விலை வாங்கிக் கொள்ளாமல் போய் விட்டாளோ, என்னமோ?" என்றான். "சே! அப்படி யிருக்காது" என்று கூறிவிட்டுப் போய் விட்டேன்.

ஒரு வாரம் சென்றது. அன்றும் ஈஸி சேரில் சாய்ந்த வண்ணம் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தேன். என் காதுகளில் பரிச்சயமான குரல் விழக் கேட்டு திரும்பிப் பார்த்தேன். அதே விறகுக்காரி, மறுபடியும் பேரம். அன்று என் பணம் பெற்றுக்கொள்ளாமல் போய்விட்டாள் என்பதற்குப் பதிலே இல்லை. பேரம் முடிந்து உள்ளே போனான் விறகுக்காரி.

சுமையைப் போட்டுவிட்டு வரட்டும், விசாரிப்போம் என்று நான் பேசாமலிருந்தேன். திடீரென்று உள்ளே தடதடவென்று ஏதோ சத்தம் கேட்டது "திருட்டுக் கழுதை! விறகு போட வந்தாயா, இல்லாவிட்டால்..."—இம்மாதிரி கூச்சல் கேட்டு எழுந்து உள்ளே போனேன். அங்கு நான் கண்ட காட்சி என்னைப் பிரமிக்க வைத்து விட்டது. விறகுக்காரியின் தலை மயிரைத் தன் கையில் வளைத்துப் பிடித்துக் கொண்டு அடிக்கத் தயாராக இருந்தான் சாம்பு. என்னைக் கண்டதும், "பாருங்கள், விறகு போடுவதுபோல் வந்து வீட்டிலுள்ள சாமானில் கை வைக்க வந்திருக்கிறாள்" என்றான் சாம்பு.

"மடியில் என்ன? எடு, அதை!" என்றேன் ஆர்ப்பாட்டத்தோடு. அவள் மெதுவாகத் தன் மடியிலிருந்த வஸ்துவை எடுத்து என் கைகளில் வைத்தாள். நான் இடியுண்ட நாகம்போல் ஸ்தம்பித்து நின்று விட்டேன். என் கையிலே ஒரு புஸ்தகம் கிடந்தது. பாரதியாரின் பாடல்கள். வெகுநாள் கையாடிப் பழையதான அந்தப் புஸ்தகத்தின் மங்கி மாசு படிந்த அட்டையின்மீது எழுதியிருந்த அந்தச் சொற்கள் என் இருதயத்தை ஈட்டிபோல் குத்திச் சென்றன. அத்தனை அழுக்குக்கிடையே, "மைமைச்சிக்கு அன்பளிப்பு" என்ற அந்தச் சொற்கள் மட்டும் மறையாமல் மின்னின.

"யார்? மைமைச்சியா?" என்று என் வாய் என்னை யறியாமல் முணுமுணுத்தது.

அடுத்த கிஷணம் அவள் தடாலென்று என் காலில் விழுந்தாள். விக்கலுக்கும் விம்மலுக்கும் இடையே கூட அவள் கூறிய அந்தச் சொற்கள் தெளிவாக என் காதுகளில் விழுந்தன:

"நான் திருட வரவில்லை, சாமி! திருப்பிக் கொடுக்க வந்தேன்; தங்கள் புத்தகத்தைத் தங்களுக்குத் தெரியாமல் கொடுத்துவிட்டுப் போக வந்தேன், சாமி!"



# அதிசயமான காரணம்



ஒரு சமயம் ஒரு ஜெர்மன் மாலுமி பிரிட்டிஷ் மாலுமிகளிடம் சிக்கிக் கொண்டான். அவனை மரியாதையாக நடத்த வேண்டும் என்று பிரிட்டிஷ் கப்பல் தலைவர் தம் மாலுமிகளுக்கு உத்தரவிட்டிருந்தார். ஆனால் அவர் கொஞ்ச நேரம் கழித்துத் தற்செயலாக மேல் தளத்துக்குப் போன போது அங்கே ஜெர்மன் மாலுமியும் பிரிட்டிஷ் சிப்பந்தியும் ஒருவரை யொருவர் தாக்கிக்கொண்டு இருப்பதைக் கண்டார். அவருக்குக் கோபம் உண்டாயிற்று. தம் சிப்பந்தியைப் பார்த்து, "உன்னை வேலையிலிருந்து நீக்கப்போகிறேன்" என்றார்.

சிப்பந்தி மிக்க வணக்கமாக, "தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்கள். நான் கொஞ்ச நேரத்துக்கு முன் மேலே வந்தபோது, இந்த மாலுமி என்னைப் பார்த்து, 'உங்கள் ராஜா நாசமாய்ப் போக!' என்றான். நான் பொறுமையாய் இருந்தேன். அவன் மீண்டும் என்னருகே வந்து முகத்தருகே வாயை வைத்து, 'உங்கள் ராணி நாசமாய்ப்போக!' என்றான். எனக்குக் கோபம் அதிகமாயிற்று. ஆனால் அப்போதும் பொறுமையை வரவழைத்துக் கொண்டேன். பிறகு அவன், என்னைப் பார்த்து அலட்சியமாகச் சிரித்துக்கொண்டு, நம்முடைய சமுத்திரத்தில் காறித் துப்பினான். அதை நான் எப்படிச் சகித்துக் கொண்டிருக்க முடியும்?" என்றான்.



## "பாப்பா"

[ஆசிரியர் : தி. ஜ. ர.; விலாசம்: பாப்பா பத்திரிகாலயம், ராயவரம், புதுக்கோட்டை சமஸ்தானம். விலை : தனிப்பிரதி 4 அணா.]

புதுக்கோட்டை சமஸ்தானத்திலே ஒரு "பாப்பா" பிறந்திருக்கிறது. அதற்கு வயது ஒன்பது மாதம் ஆகிறது.

குழந்தைகளுக்காக ஆங்கிலத்திலே பல அருமையான புத்தகங்களும் பத்திரிகைகளும் இருக்கின்றன. அவற்றைப் பார்க்கும்போதெல்லாம், இந்த மாதிரி தமிழில் இல்லையே என்று ஏங்கிரேும். அந்தக் குறையைப் "பாப்பா" ஒருவாறு போக்குகிறது. இது தமிழ்ப் பத்திரிகை யுலகத்துக்கு ஒரு புதுமை.

குழந்தைகளுக்கு இயற்கையாக நேரும் எல்லா நோய்களிலிருந்தும் தப்பி, இந்தப் "பாப்பா" என்றும் சிரஞ்சீவிப் பாப்பாவாக வாழுமாக.

## தந்தையின் காதல்

ஆசிரியர் : கி. ரா; பிரசுரம் : கமலா பிரசுரம்; விற்பனை உரிமை : ஸ்ரீ மகள் கம்பெனி, பிராட்வே, சென்னை. விலை : ரூ. 1—8—0.]

அகில இந்திய ரேடியோவில் ஒலி பரப்பப்பட்ட நான்கு நாடகங்கள் இப் புத்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சம்பாஷணைகள் நாடக மேடை தோரணையில் இல்லாமல் இயற்கையாகவும் அங்கங்கே நகைச்சுவை மாகவும் அமைந்திருக்கிறது. ரேடியோவில் மட்டுமின்றிக் குடும்ப நிகழ்ச்சிகளிலும் இந்நாடகங்கள் நடிக்க ஏற்றவையா யிருக்கும்.

## பாலபாரதம்

[ஆசிரியர் : வேஙு—சுப்புராமி ஐயர் : பிரசுரம் : மங்கள நூலகம், நுங்கம்பாக்கம், சென்னை. விலை ரூ. 1.]

மிகப் பெரிய விஷயம் ஒன்றைப் பற்றிக் கூறும்போது, "அது மகாபாரதமல்லவா?" என்கிறோம். அவ்வளவு பிரமாண்டமான நூலைச் சுருக்கி வெளியிடுவ தென்பதும் ஒருமகத்தான காரியந்தான்.

## 1. இயற்கையின் நடனம்
## 2. தமிழ்ச்சுவை

[ஆசிரியர் : தே. ப. பெருமாள் : பிரசுரம் : கவிக்குயில் நிலையம், கோட்டாறு : விலை : ரூ. 1—8—0 : ரூ. 1—0—0]

"இயற்கையின் நடன"த்தில், ஆசிரியர் இயற்கை உதாரணங்களுடன் இயற்கையாகவே தமக்குள்ள கவிதைப் பண்பு விளங்க அழகிய கவிதைகள் இயற்றியிருக்கிறார். "தமிழ்ச்சுவை"யில் உள்ள கவிதைகளின் சொல்லமுதத்திலும் பொருளமுதத்திலும் நாமும் ஆழ்ந்து போய் விடுகிறோம்.

## ஸ்டாலின்

[ஆசிரியர் : வெ. ராமசாமி; பிரசுரம் : இளைஞர் வெளியீடு : விற்பனை உரிமையாளர் : சக்தி காரியாலயம், சென்னை : விலை : அணா 8.]

இராஜ தந்திரத்திலும் இராணுவ தந்திரத்திலும் நிகரற்று விளங்கும் தோழர் ஸ்டாலின் வாழ்க்கை விவரங்கள் இப்புத்தகத்தில் தெள்ளத் தெளிந்த இனிய தமிழ் நடையில் கூறப்பட்டிருக்கின்றன. ஸ்டாலின் வாழ்க்கையில் நடந்த பல சம்பவங்களைப் படிக்கும் போது ஏதோ கதை வாசிப்பது மாதிரி இருக்கிறது. இது, ஆசிரியரின் எழுத்து வன்மையைக் குறிக்கிறதே தவிர, நூலில் உள்ள சம்பவங்கள் கற்பனை என்று ஆகாது.

## பழனிப் பிள்ளைத் தமிழ்

[ஆக்கியோர் : பழனி ஜமீன் விசயகிரி வேலச் சின்னோவையன் : வெளியிடுவோர் : பழனி ஸ்ரீ தண்டாயுதபாணி தேவஸ்தானம் : விலை : தெரியவில்லை.]

பிள்ளைத் தமிழ் என்பது, கவிஞர் யாரைப் பற்றிப் பாடுகிறரோ அவரைக் குழந்தையாகப் பாவித்து அப்பருவத்தில் நிகழும் நிகழ்ச்சிகளைப் பத்துப் பருவங்களாக வகுத்துக் கொண்டு கூறுவது. பழனிப் பஞ்சாமிர்தம் நம் நாவை அடிமையாக்கிக் கொள்வதுபோல் பழனிப் பிள்ளைத் தமிழும் அதன் கவி நயத்திலும் நம் நெஞ்சை அடிமைப் படுத்திக் கொள்கிறது.

## காலக்ஷேபம் :: புதிய பரிசுத் திட்டம்

பல நேயர்களின் அபிப்பிராயத்தை அனுசரித்துக் காலக்ஷேபப் பரிசுத் திட்டத்தைப் பின்வருமாறு மாற்றி யமைத்திருக்கிறது :—

முதற் பரிசு ரூ. 5 : ஒவ்வொரு "கல்கி" இதழிலும் வெளியாகும் நேயர்களின் காலக்ஷேபங்களில் எல்லாவற்றிலும் சிறந்ததாகக் கருதப்படும் காலக்ஷேபத்துக்கு முதற் பரிசு ரூபாய் ஐந்து அளிக்கப்படும்.

ஒரு ரூபாய் பரிசு : மற்றப்படி ஒவ்வொரு "கல்கி" இதழிலும் காலக்ஷேபப் பக்கத்திலோ, வேறு உட்பக்கங்களிலோ பிரசுரிக்கப்படும் ஒவ்வொரு காலக்ஷேபத்துக்கும் ஒவ்வொரு ரூபாய் வீதம் பரிசு அனுப்பி வைக்கப்படும்.

மேற்கண்ட புதிய காலக்ஷேபப் பரிசுத் திட்டம் நாளது 1945 ௵ ஏப்ரல் 1௳ "கல்கி" இதழிலிருந்து அமுலுக்கு வருகிறது.

# "சமையல் அறையில் விடாதே"

## நாடோடி

அப்பா! இந்தப் பெண்களை நம்பவே கூடாது. என் மனைவி சரசு இருக்கிறாளே, பார்த்தால் பூனைபோல் இருக்கிறாள். என்னமோ என்னைக் கண்டு நடுங்குகிறவள் போல் நடிக்கிறாள். ஆனால் உண்மையிலேயே அவள் என்னைப் பற்றிக் கொண்டிருக்கும் அபிப்பிராயம் எனக்கு இப்பொழுதல்லவா தெரிகிறது?

சமீபத்தில்தான் கல்யாணம் ஆன தன் சிநேகிதி ஒருவளுக்கு சரசு எழுதி வைத்திருந்த ஒரு கடிதத்தை நான் பார்க்க நேர்ந்தது.......

"ஐயையோ! அநியாயம் அக்கிரமம்! பெண்கள் எழுதும் கடிதங்களைப் புருஷர்கள் பார்க்கலாமா? கடிதம் எழுதக்கூடப் பெண்களாகிய எங்களுக்குச் சுதந்திரம் கிடையாதா? குடிமுழுகிப் போச்சு!" என்று படித்த பெண்கள் கதறுவது என் காதில் விழுகிறது.

"என்ன ஐயா! பெரிய காட்டுமிராண்டி மனுஷனாக இருக்கிறீரே? மனைவி எழுதும் கடிதங்களைப் புருஷன் பிரித்துப் பார்க்கலாமா! சட்! அநாகரிகம்!" என்று நவநாகரிக புருஷர்கள் முகத்தைச் சுளித்துக் கொள்வதும் என் மனக் கண்முன் தோன்றுகிறது!

மனைவி எழுதும் கடிதத்தைப் புருஷன் பிரித்துப் பார்க்கக் கூடாது என்னும் தற்கால சம்பிரதாயத்தை நான் அறிந்தவன் தான். இந்தச் சம்பிரதாயத்துக் கேற்ப சரசுவுக்கு வரும் கடிதங்களையோ, அல்லது அவள் எழுதும் கடிதங்களையோ நான் அவளுக்கெதிரில் பிரித்துப் பார்ப்பது கிடையாது. ஆனால் தபாலில் போடுவதற்காக அவள் கொடுக்கும் கடிதங்களை, அவளுக்குத் தெரியாமல் கூடப் பிரித்துப் பார்க்கக் கூடாது என்றால், பிறகு என்ன புருஷன், மனைவி வேண்டிக் கிடக்கிறது என்று கேட்கிறேன்?

சரசு தன் சிநேகிதிக்கு எழுதியிருந்த கடிதத்தைக் கண்டதும் நான் திடுக்கிட்டே போய் விட்டேன். இதோ கடிதத்தைக் கீழே கொடுத்திருக்கிறேன். நீங்களே படித்துப் பாருங்கள்:

என் பிரியமுள்ள ஹேமாவுக்கு,

உன் கடிதம் கிடைத்தது. நீ உன் புருஷனுடன் சந்தோஷகரமான வாழ்க்கை நடத்துகிறாய் என்று கேள்விப்பட மிகவும் சந்தோஷம். ஆனால் என்னுடைய வாழ்க்கை அனுபவத்திலிருந்து நான் உனக்கு ஒரு நல்ல யோசனை சொல்லக் கூடும். இந்த யோசனையை நீ எவ்வளவுக் கெவ்வளவு பின்பற்றுகிறாயோ, அவ்வளவுக் கவ்வளவு நல்லது. இல்லையோ, திண்டாட்டம்தான்.

பார்க்கப்போனால் நான் சொல்லப்போகும் யோசனை மிகவும் சின்ன யோசனைதான். எந்தப் பெண்ணும் பின்பற்றி நடக்கக் கூடிய யோசனைதான். அது என்னவென்றால் உன் புருஷனைச் சமையல் அறையில் விடாதே! எக்காரணம் பற்றியும் சமையல் அறையில் விடாதே!

கட்டின புருஷனுக்குச் சமையலறைக்கு வரக்கூடச் சுதந்திரம் கிடையாதா என்று நீ கேட்கலாம். உன்னைப்போல்தான் நானும் அசட்டுத்தனமாக நினைத்துக் கொண்டு என் புருஷனைச் சமையல் அறைக்குள் விட்டேன். அதன்காரணமாக வெகு அன்னியோன்யமாக வாழ்ந்த நாங்கள் எலியும், பூனையும் போல் சண்டை போட்டுக் கொள்ளத் தொடங்கிவிட்டோம்.

கொஞ்ச நாட்களுக்கு முன்னால் வரையில் நான் அவரைச் சமையல் அறைக்கு வரும்படி விட்டதே கிடையாது. எங்கே சமையல் அறைக்குள் நுழைந்து விடப் போகிறாரோ என்று முன்கூட்டியே எல்லாக் காரியங்களையும் செய்து வைப்பேன். அவர் காலையில் எழுந்திருப்பதற்கு முன்னாலேயே காப்பியைக் கொண்டுபோய் அவர் அறையில் தயாராக வைத்து விடுவேன். "காப்பி எங்கே?" என்று கேட்டுக் கொண்டே சமையலறையைத் தேடி வரும் சந்தர்ப்பம் அவருக்கு நான் வைப்பதே கிடையாது.

என்னை ஏதாவது கேட்பதற்காக "சரசு!" என்று அவர் கூப்பிட வேண்டியதுதான் தாமதம், எங்கே சமையலறையைத் தேடி வந்து விடப் போகிறாரோ என்று நான் பயந்து கொண்டு விடு விடென்று கூடத்துக்கு ஓடி வந்து விடுவேன்.

சாப்பாட்டு வேளையிலும் அவரை நான் சமையலறைக்குள் நுழைய விடுவதில்லை. எப்பொழுதும் அவரைக் கூடத்தில் வைத்துத்தான் சாப்பாடு போடுவேன்.

**ஆ**னல் அனு பிறந்தாலும் பிறந்தாள், கூடவே சோம்பேறித்தனமும் பிறந்தது. ஒரு நாள் அனுவுக்காகப் பால் புட்டியில் பால் ஊற்றிக் கொண்டிருந்தேன். அந்தச் சமயம் பார்த்து, "சாப்பாடு போடுகிறாயா?" என்று அவர் கேட்கவும், சோம்பேறித்தனத்தால், "இங்கே சமையலறைக்குத்தான் வாங்களேன் சாப்பிட" என்றேன்.

அப்படியே அன்று சமையலறைக்குச் சாப்பிட வந்தார். அன்றிலிருந்து எனக்கும் பிடித்தது அனர்த்தம்.

சமையல் அறைக்கும், கூடத்துக்கும் குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு நடப்பதோடு, குனிந்தும், நிமிர்ந்தும் பரிமாறுவது சிரமம் என்று நான் சொல்ல வேண்டியதில்லை. ஆகவே நான் சமையலறையிலேயே அவருக்குத் தட்டு வைத்துச் சாப்பாடு போட ஆரம்பித்தேன்.

சோம்பேறித்தனத்தால் நான் இந்த அனுகூலத்தைப் பார்க்கப் போக எனக்குப் பிடித்தது அனர்த்தம்! என்ன என்று இதோ சொல்லுகிறேன், கேள்.

**அ**வரை நான் சமையல் அறையில் விட ஆரம்பித்ததிலிருந்து அவருக்கு என் சமையலில் இருந்த ருசி கொஞ்சம் கொஞ்சமாகக் குறைய ஆரம்பித்தது.

முன்னெல்லாம் நான் உப்பாகப் போட்டாலும், புளியாகப் போட்டாலும், "பேஷ்! பேஷ்!" என்று தலையை ஆட்டிக் கொண்டும் சப்புக் கொட்டிக் கொண்டும் சாப்பிட்டுக் கொண்டிருந்த அவர், இப்பொழுது மெள்ள மெள்ள என் சமையலில் குற்றம் சொல்ல ஆரம்பித்து விட்டார். பாதிச் சமையல் ஆகிக்கொண்டிருக்கும் போதே சமையல் அறைக்கு வந்து, "இன்னுமா சமையல் ஆகவில்லை?" என்று கடிந்து கொள்ள ஆரம்பித்து விட்டார். இது போதாதென்று சமையலுக்குத் திட்டம் வேறு சொல்ல ஆரம்பித்து விட்டார்.

"ஏன் இத்தனை உப்புப் போடுகிறாய்! அதனால்தான் நேற்று சமையல் உப்புக் கரித்தது. இந்தா. இத்தனை உப்புப் போட்டால் போதும்" என்று அவராகவே ஒரு நாள் சாம்பாருக்கு உப்புப் போட்டார். இதனால் அன்றையச் சமையல் கோளாறுடன், அடுத்த வீட்டு ஜன்னலிலிருந்து எங்கள் வீட்டுக் காரியங்களையெல்லாம் கவனித்துக் கொண்டிருக்கும் அம்மாளுக்கும், அவர் எனக்குச் சமையல் வேலை

# அது என்னமோ?



ஜோராக மோட்டாரில் போகும்போது, தெரிந்தவர் யாரும் எதிர்ப்படுவதில்லை......



ஆனல் தப்பித் தவறி மூட்டை முடிச்சுடன் கால்நடையாகப் போகும்போது மட்டும்




எங்கிருந்தோ சொல்லி வைத்தாற்போல் எல்லாரும் வந்து எதிர்ப்படுவார்கள்!

வில் கூட மாட ஒத்தாசை செய்வதாகத் தோன்றத் தொடங்கி விட்டது!

இன்னொரு நாள் நான் காப்பி போட்டுக் கொண்டிருந்த சமயம் அவர் உள்ளே வந்தார். அப்பொழுதுதான் நான் பில்டரில் காப்பிப் பொடி போட்டுக் கொண்டிருந்தேன். அதைப் பார்த்ததும், "காப்பிக் கொட்டை விலை தூக்கி விற்கும் இந்தக் காலத்தில் இத்தனை காப்பிப் பொடி போட்டால் கட்டுமா?" என்று கொஞ்சமாகப் போடச் சொன்னார்.

பொடி கொஞ்சமாகப் போட்டதால் காப்பி நன்றாக இல்லை. உடனே அவருக்குக் கோபம் வந்து விட்டது. புது, புது என்று என்னுடன் சண்டைக்கு வந்து விட்டார்.

அவர் சமையல் அறைக்கு வர ஆரம்பித்ததிலிருந்து அவரை ஏதாவது சாமான் வாங்கிக் கொண்டுவரச் சொல்வதற்குக் கூடப் பயமாக இருக்கிறது. எது கேட்டாலும், "இப்பத்தானே வாங்கிக் கொடுத்தேன். அதற்குள் ஆகிவிட்டதா? நேற்றுத் தானே டப்பா நிறைய இருந்தது. பார்த்தேன். அதற்குள் எப்படி ஆகும்? நான் தான் நீ சமையல் அறையில் சாமான்களை வைத்திருக்கும் அழகைப் பார்த்திருக்கிறேனே? இந்த மாதிரி டாம், டூம் என்று குடித்தனம் பண்ணினால் இந்தக் குடித்தனம் எப்படி உருப்படும்?" என்று கேட்க ஆரம்பித்து விடுகிறார்.

வெகு நாளாகச் சமையல் அறைக்குள் விடாத அவரை என்னடா சமையல் அறைக்குள் விட்டோம் என்று இருக்கிறது. இத்தனைக்கும் இந்த அனுதானே காரணம் என்று அவள் மீது கூடச் சில சமயங்களில் சீறி விழுகிறேன்.

ஆகவே என் பிரியமுள்ள ஹேமா! உன்னை இப்பொழுதே எச்சரித்து விட்டேன். ஜாக்கிரதையாக இரு. உன் கணவரை எக்காரணம் பற்றியும் சமையல் அறையில் விடாதே!

★

சீதா எழுதியிருக்கும் கடிதத்தைப் பார்த்து ஹேமா முன்னெச்சரிக்கையாக நடந்துகொண்டாளோ, என்னவோ. நான் இனிமேல் சமையல் அறைக்குள் நுழைவதில்லை என்று சபதம் செய்துவிட்டேன். நீங்களும் உங்கள் மனைவியிடம் நல்ல பெயர் வாங்க விரும்பினாலும், அல்லது உங்கள் மனைவி உங்களிடம் நல்ல பெயர் வாங்க வேண்டுமென்று விரும்பினாலும், சமையல் அறையில் நுழையாதீர்கள்!

★ ★ ★

# செய்யக் கூடிய காரியந்தான்!

பிரசித்திபெற்ற மாஜி பிரிட்டிஷ் பிரதம மந்திரி லாயிட் ஜார்ஜ் காலமானதாகச் சென்ற வாரத்தில் செய்தி வந்ததல்லவா? இந்த யுத்தத்தில் சர்ச்சில் எப்படியோ அப்படிச் சென்ற யுத்தத்தில் லாயிட் ஜார்ஜ் ஜெயவீரராகப் புகழ்பெற்று விளங்கினார். மொத்தம் 54 வருஷம் அவர் பார்லிமெண்டில் அங்கத்தினராக இருந்தார். அரசியலுலகில் அவருக்கு விரோதிகள் ரொம்ப அதிகம். ஒரு சமயம் அவர் எவ்வளவு தூரம் பொதுஜன விரோதத்துக்கு ஆளாகி யிருந்தார் என்பதைக் காட்ட ஒரு ரசமான கதை உண்டு.



ஒரு நாள் ஒரு மனிதன் ஒரு குளத்தங்கரைப் பக்கமாகப் போய்க் கொண்டிருந்தான். குளத்தில் ஒரு மனிதன் மூழ்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். உடனே, அவன் குளத்தில் குதித்து அந்த மனிதனைக் காப்பாற்றினான். அந்த ஊர் நகரசபைத் தலைவர் அவனுடைய வீரத்தைப் புகழ்ந்து, அவனுக்கு ஒரு விருந்தும் பரிசும் அளித்தார். அந்த மனிதன் பரிசைப் பெற்றுக் கொண்டு முடிவுரையாகப் பேசும்போது, பின்வருமாறு கூறினான்:—

"நீங்கள் எல்லோரும் என்னை எதற்காகப் புகழுகிறீர்கள் என்று எனக்குத் தெரியவில்லை. இதில் புகழ்வதற்கு என்ன இருக்கிறது? அந்த மனிதன் குளத்தில் மூழ்கிக்கொண்டிருப்பதைப் பார்த்தேன். பக்கத்தில் யாரும் இல்லை. உடனே காப்பாற்றாவிட்டால் அவன் செத்துப் போவான். ஆகையால், குளத்தில் குதித்து நீந்திக்கொண்டே அவனருகே சென்று அவன் முகத்தைத் திருப்பிப் பார்த்தேன். அவன் அந்தப் பொல்லாத லாயிட் ஜார்ஜ் அல்ல என்பது தெரிந்ததும், இழுத்துக்கொண்டு வந்து கரையில் சேர்த்தேன். இது எல்லோரும் செய்யக் கூடிய காரியமே அல்லவா?"

இந்தக் கதையின் ஒரு பெரிய விசேஷம் என்னவென்றால், இதைக் கற்பனை செய்து சொன்னவர் அந்தப் பொல்லாத லாயிட் ஜார்ஜ்தான்!

# ஈறுகளில் ரத்தம் கசிந்தால்

## —உடனே கவனிக்க வேண்டும்!

பல் சொத்தைக்கு இந்த எச்சரிக்கையை அசட்டை செய்யாதீர்கள்! ரத்தம் கசிவது பயோரியா ஜின்ஜிவிடிஸ் இவைகளின் முதல் சின்னம்—இக் கொடிய ஈறு வியாதிகள் உங்கள் பற்களை நாசமாக்கி தேகம் முழுவதையுமே கெடுத்து விடக் கூடும். கிப்ஸ் "எஸ். ஆர்." டூத் பேஸ்ட் உபயோகியுங்கள். அதிலுள்ள சோடியம் ரெஸிநோலியேட்டைத்தான் பல் வைத்தியர்கள் ஈறு வியாதிகளுக்கு உபயோகிக்கிறார்கள். கிப்ஸ் "எஸ். ஆர்." வழக்கமாக உபயோகித்தால் அது உங்கள் ஈறுகளை ஆரோக்கியமாகவும் பற்களை உறுதியாகவும் இருக்கச் செய்து தேகாரோக்கியத்தையும் பாதுகாக்கும்.

**Gibbs**



**"S.R." TOOTHPASTE**

GSR. 19-33 TM

D. & W. GIBBS LTD., LONDON, ENGLAND



# உங்கள் மனதிற்குகந்தது

டிலக்ஸ் டெனார் சிகரெட்டின் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள். உத்தரவாதமுள்ள 100% பொருக்கின வர்ஜீனியா புகையிலை தான் டெனார் செய்ய உபயோகிக்கப் படுகிறது. இதுவே எல்லோரும் விரும்பி ரஸிப்பதற்கும், தொண்டைக்கு கெடுதல் செய்யாதிருப்பதற்கும் காரணம். மனோரம்மியமான இந்த சிகரெட்டை இன்றே வாங்கி நீங்கள் உபயோகியுங்கள்

**டி லக்ஸ் டெனார் சிகரெட்டு**

**ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்**

**Tenor** is truly a de Luxe Cigarette

JAMES CARLTON LTD. LONDON.

## T.K.S. சகோதரர்களின் நாடகம்

5 - 4 - 45 முதல் தினசரி

# ஸ்ரீ கிருஷ்ண லீலா

★



★

புதன், ஞாயிறு, மாலை 7-க்கும்
மற்ற நாட்களில் இரவு 10-30க்கும்

## திருச்சி
## முனிசிபல் ஹாலில்

[illegible]:

| | |
|---|---|
| ஔவையார் | ரூ. 1 - 8 - 0 |
| பில்ஹணன் | ரூ. 2 - 0 - 0 |

---

# தி இந்தியன் பாங்க் லிமிடெட்.

★

தலைமை ஆபீஸ்:
"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு, மதராஸ்

★

லோகல் ஆபீஸ்கள்:

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி,
மவுண்டு ரோடு, மயிலாப்பூர்,
தியாகராய நகர், புரசவாக்கம்.

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும், பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

| | |
|---|---|
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 60,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 33,55,946 |
| ரிஸர்வ் நிதி | ரூ. 33,00,000 |

டெபாஸிட்டுகள் ரூ. 10½ கோடிக்கு அதிகம்

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி.

Regd. No. M. 4392




ஸிம்ப்ஸன்



ஸிம்ஸன் முத்திரையுள்ள க்யாஸ்பிளாண்ட் எளிதில் புறப்படச் செய்யும் தன்மையுள்ளது, தவிர க்யாஸிலிருந்து பெட்ரோலுக்கோ, க்யாஸையும் பெட்ரோலும் சேர்த்து ஓட்டுவதற்கோ, சுலபமாக மாற்ற பிரத்தியேகமாய்ச் செய்யப்பட்ட "ஸ்டான் ஸிம்கோ" "க்யாஸ் மிக்ஸிங் சேம்பர்" என்னும் கருவியை உடையது.

க்யாஸ் எவ்வளவு பரிசுத்தமாக இருக்கிறதோ அவ்வளவு மேன்மையான உழைப்பு

**ஸிம்ப்ஸன் & கம்பெனி, லிமிடெட்.**
மவுண்ட்ரோடு. மதராஸ்.


1840ல் ஸ்தாபித்த ஓர் இந்திய தொழிற் சாலை

இன்றைய சிறந்த முதலீடு, நாஷனல் சேவிங்ஸ் ஸர்டிபிகேட்டுகள்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.